




தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] விரோதிகிருது பங்குனி (14-3-72) [கருணை 6

## ஸ்ரீ ராம நவமி

இந்தப் பங்குனி மாதம் 10-ம் தேதி (23—3—72) வியாழக் கிழமையன்று, பகவான் ஸ்ரீ வைகுண்டேஸ்வரன் பூலோகத்தில் சக்ரவர்த்தித் திருமகனாக அவதாரம் செய்த புண்ய தினம் வருகிறது.

அந்தத் திருநாளைப் பல்லாயிரம் ஆண்டுகளாக நம் முன்னோர்கள் பற்பல விதங்களில் கொண்டாடி வருகிறார்கள். அவை எல்லாவற்றுள்ளும் சிறந்த முறை என்னவென்றால், பகவான் இவ்வுலகியல் வாழ்வில் நடந்து காட்டிய சில நன்னெறிகளை, நாமும் நம்மால் முடிந்த அளவு முழு மனத்தோடு கடைப்பிடிக்க முயலுவதே ஆகும்.

ஏகபத்னி விரதம், சத்தியமே பேசுவது, பெற்றோர் சொல்லைத் தட்டாமல் நடப்பது, அண்டினவர்களைக் கைவிடாமல் ஆதரிப்பது இவையெல்லாம் பகவானிடம் விளங்கி வந்த உத்தமமான கல்யாண குணங்களில் ஒரு சில எனலாம். இந்த ஒரு சில குணங்களையேனும் உளப்பூர்வமாக மேற்கொள்ள முயன்றால், ஸ்ரீ ராமபிரானுடைய திருவருளுக்கு நாம் எளிதில் பாத்திரமாகி விடலாம். அப்புறம் இம்மையிலும் மறுமையிலும் நாம் அடையத் தக்க பெரும்பேறு வேறு என்ன இருக்கிறது?

—ஆசிரியர்.

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
| --- | --- | --- |
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி: நிர்வாகி, " அருள், "
231, ஆழ்வார் திருநகர், சென்னை.

உ

# ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் துதி

## ஸ்ரீ அவிநாசிமணி

கற்பூர நாயகியே கனகவல்லி
காளி மக மாயி கருமாரியம்மா!
பொற் கோயில் கொண்ட சிவகாமி யம்மா!
பூவிருந்தவல்லி தெய்வானையம்மா!
விற்கோல வேத வல்லி; விசாலாட்சி;
விழிக்கோல மாமதுரை மீனாட்சி
சொற்கோயில் நானமைத்தேன் இங்குதாயே!
சுடராக வாழ்விப்பாய் என்னை நீயே!

புவனமுழு தாளுகின்ற புவனேஸ்வரி
புர மெரித்தோன் புறமிருக்கும் பர மேஸ்வரி!
நவநவமாய் வடிவாகும் மகேஸ்வரி!
நம்பினவர் கைவிளக்கே சர்வேஸ்வரி!
கவலைகளைத் தீர்த்திடும் ஜோதிஸ்வரி!
காரிருளின் தீச்சுடரே காளீஸ்வரி!
உவமானப் பரம்பொருளே ஜகதீஸ்வரி!
உன்னடிமைச் சிறியேனை நீ ஆதரி!

உன்னிடத்தில் சொல்லாமல் வேறு எந்த
உறவிடத்தில் முறையிடுவேன் தாயே எந்தன்
அன்னையவள் நீயிருக்க உலகில் மற்ற
அன்னியரைக் கெஞ்சிடுதல் முறையோ அம்மா!

கண்ணீரைத் துடைத்துவிட ஓடிவாம்மா!
காத்திருக்க வைத்திடுதல் சரியோ அம்மா!
சின்னவனின் குரல்கேட்(டு) உன்முகம் திருப்பு!
சிரித்தபடி என்னைத்தினம் வழிஅனுப்பு!

கண்ணிரண்டும் உன்னுருவே காணவேண்டும்!
காலிரண்டும் உன்னடியே நாடவேண்டும்!
பண்ணமைக்கும் நாஉனையே பாடவேண்டும்!
பக்தியொடு கையுனையே கூடவேண்டும்!
எண்ணமெல்லாம் உன்நினைவே ஆகவேண்டும்!
இருப்பதெல்லாம் உன்னுடையதாக வேண்டும்!
மண்ணளக்கும் சமயபுர மாரியம்மா!
மகனுடைய குறைகளையும் தீருமம்மா!

நெற்றியினுள் குங்குமமே நிறையவேண்டும்!
நெஞ்சினிலுன் திருநாமம் வழியவேண்டும்!
கற்றதெலாம் மேன்மேலும் பெருகவேண்டும்!
கவிதையிலே உன்நாமம் வாழவேண்டும்!
சுற்றமெல்லாம் நீடூழி வாழவேண்டும்!
ஜோதியிலே நீயிருந்து ஆளவேண்டும்!
மற்றதெல்லாம் நானுனக்குச் சொல்லலாமா?
மடிமீது பிள்ளைஎன்னைத் தள்ளலாமா?

அன்னைக்கு உபசாரம் செய்வதுண்டோ?
அருள்செய்ய இந்நேரம் ஆவதுண்டோ?
கண்ணுக்கு இமையின்றிக் காவலுண்டோ?
கன்றுக்குப் பசுவின்றிச் சொந்தமுண்டோ?
முன்னைக்கும் பின்னைக்கும் பார்ப்பதுண்டோ?
முழுமைக்கும் நீஎந்தன் அன்னையன்றோ?
எண்ணெய்க்கும் விளக்குக்கும் பேதமுண்டோ?
என்றைக்கும் நானுந்தன் பிள்ளையன்றோ?

அன்புக்கே நானடிமை ஆகவேண்டும்!
அறிவுக்கே என்காது கேட்கவேண்டும்!
வம்புக்குப் போகாமல் இருக்கவேண்டும்!
வஞ்சத்தை என்னெஞ்சம் அறுக்கவேண்டும்!

பண்புக்கே உயிர்வாழ ஆசைவேண்டும்!
    பரிவுக்கே நானென்றும் பணியவேண்டும்!
என்பக்கம் இவையெல்லாம் இருக்கவேண்டும்!
    என்னேடு நீஎன்றும் வாழவேண்டும்!

கும்பிடவோ கையிரண்டு போதவில்லை!
    கூப்பிடவோ நாவொன்ருல் முடியவில்லை!
நம்பிடவே மெய்யதனில் சக்தியில்லை!
    நடந்திடவோ காலிரண்டால் ஆகவில்லை!
செம்பவள வாயழகி உன்னெழிலோ
    சின்ன இருகண்களுக்குள் அடங்கவில்லை!
அம்பளவு விழியாளே உன்னை என்றும்
    அடிபணியும் ஆசைக்கோர் அளவுமில்லை!

காற்ருகிக் கனலாகிக் கடலாகிஞய்!
    கயிருகி உயிராகி உடலாகிஞய்!
நேற்ருகி இன்ருகி நாளாகிஞய்!
    நிலமாகிப் பயிராகி உணவாகிஞய்!
தோற்ருலும் ஜெயித்தாலும் வாழ்வாகிஞய்!
    தொழுதாலும் அழுதாலும் வடிவாகிஞய்!
போற்ருத நாளில்லைதாயே உன்னை!
    பொருளோடு புகழோடு வைப்பாய் என்னை!

[உதவியவர்: சென்னை சைதாப்பேட்டை ஸ்ரீ விஜயா பிரிண்டிங் பிரஸ் உரிமையாளர் ஸ்ரீ நா. இராஜகோபாலன் அவர்கள்.]



# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள்வாக்கு



உனக்குண்டாகும் சினம் உனக்கே தீமையைத் தருமென்பதை மறந்து விடாதே!

நீ தீய காரியம் செய்வதற்குக் காரணம், உன்னிடம் மறைந்திருக்கும் கொடிய சினம் என்பதை மறவாதே!

உன்னிடமுள்ள கொடிய சினம் என்னும் காட்டுத் தீ, உன்னையும் உன் துணைவர்களையும் அழிக்கும்.

கொடிய கோப முள்ளவன் செத்தாரோடு வைக்கத் தக்கவன்.

தனக்குத் துன்பம் வரினும் பிறர்க்குத் துன்பம் செய்யாமலிருப்பவனே மிக மிகப் பெரியோனுவான்.

பிற உயிருக்கு நீ தரும் துன்பம், முடிவில் உன் உயிருக்கு நீயே தேடிக் கொண்ட துன்பமாக மாறி, கொடிய துயரத்தை உனக்குக் கொடுக்கு மென்பதை மறவாதே.

நீ துன்பமில்லாமல் இருக்க வேண்டுமா? பிறர்க்குத் துன்பம் தரும் நினைவையும் கூட நீ நினையாமல் இருப்பாயாக.

உன்னுயிரையே விட நேரிட்டாலும், நீ வேறு ஒன்றின் உயிரைப் போக்காமலிருப்பதே மிகப் பெரிய தவமாகும்.

ஓர் எறும்பைக் கொன்ருலும் நீ ஒரு கொலையாளியாகிருய். கொலைக் குற்றம் உன்னைப் பற்றிக் கொண்டு விடுவதனுல், அதற்குண்டான தண்டனையை நீ அனுபவித்தே தீர வேண்டும்.

நிலையற்ற செல்வத்தை நிலைத்திருக்கு மென்று நம்பி ஏமாற்ற மடையும் உன் புல்லறிவினை நினைத்து, அழுவதா? சிரிப்பதா?

“காலையில் இருந்தான், இப்பொழுது மறைந்து விட்டா

னய்யா!" என்று சொல்லும் சொற்களைக் கேட்டுக் கொண்டே, மனக்கோட்டை கட்டுகிருயே?

நீ துன்பம் இல்லாமல் இருக்க ஒரே வழி, பற்றுக்களை அறவே விட்டு ஒழிப்பாயாக!

இன்பத்தை விரும்பினல் போதுமா? பற்றினைவிடு; இன்பம் தானே உன்னைத் தேடிவரும்.

பற்றற்றவனை உலகம் போற்றும்.

பற்றை அறவே விட உறுதி பூண்டவனே மக்களுள் வீரனும், தீரனும், ஆண் மகனுமாவான்.

இருவகைப் பற்றையும் விட்டவனுக்கு, தேவர்க்கும் கிட்டாத பேரின்பம் கிட்டிவிடும்!

பற்று உள்ளவனுக்குப் பற்பல பிறவிகள் வந்தே தீரும்.

நீ பிறந்து இறந்து துன்பப்படாமல் இருக்க வேண்டுமானல், உன்னிடமுள்ள பற்றுக்கள் அனைத்தும் அறவே நீங்க வேண்டும்.

அழியக் கூடிய பொருள்களை மெய்ப் பொருள் என்று நம்பி மயங்கும் மனிதனுக்கு, உறுதியாக மீண்டும் பிறப்பு உண்டாகும்.

ஆசைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிறப்பினை உண்டாக்குமென்பதை மறவாதே.

ஆசைகளை விடுவதில் நீ முழு மனத்துடன் ஆசைப்படு. நிராசை உண்டானல் பிறவிப்பிணி நீங்கும்.

நீ நிராசையாக இருக்க ஆசைப்படு. பேராசை ஒழிந்து விடும் ○

## புதிய விலாசம்



நமது "அருள்" பத்திரிகையின் காரியாலயம்,

231, ஆழ்வார் திருநகர்,

சென்னை

என்னும் புதிய விலாசத்திற்கு மாற்றப்பட்டிருக்கிறது என்பதை அன்பர்களுக்கு அறிவித்துக் கொள்கிருேம்.

நிர்வாகி, "அருள்"

# இரண்டு வழிகள்



ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார்

நமக்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று ஆகும் வழி; மற்ருென்று சாகும் வழி.

ஆகும் வழி வடக்கு நோக்கிச் செல்வது; சாகும் வழி தெற்கு நோக்கிச் செல்வது. வடக்கே சிவபெருமான் வீற்றிருக்கின்ருர். தெற்கே இயமன் இருக்கின்ருன். சிவனை நோக்கிச் சென்ருல் கிடைப்பது அவருடைய சரணம். இயமனை நோக்கிச் சென்ருல் கிடைப்பது மரணம்.

நாம் அதிக நேரம் தெற்கே நோக்கித்தான் பிரயாணம் புரிகின்ருேம். சில விநாடி நேரம்! அதுவுங்கூடச் சரியில்லாமல், வடக்கு நோக்கித்தான் பிரயாணம் புரிகின்ருேம்.

"ஆகும் வழி எது? சாகும் வழி எது?" என்று இப்போது நினைவு கூர்வோம்.

சிவத்தைப் பேணித் தவத்தைச் செய்வது ஆகும் வழி. அவநெறிச் சென்று வெறும் பொழுது போக்குவது சாகும் வழி.

சிலர் வடக்கே போகும் இரயிலில் ஏறிக்கொண்டு, "நாம் வடக்கேதான் போகின்ருேம்" என்று கருதலாம். அவர்கள் உடம்பு வடக்கே நோக்கிப்போனுலும், சிந்தையும், செயலும், சொல்லும் தெற்கு நோக்கித்தான் செல்கின்றன.

தெற்கே நோக்கி ஒரு இரயில் வண்டி போய்க் கொண்டிருக்கின்றது. மணிக்கு 60 மைல் வேகத்தில் வண்டி ஓடுகின்றது. வண்டிக்குமேல் நீளமான தண்ணீர் இரப்பர் குழாய் இருந்தது. ஒரு சிற்றெறும்பு தெற்கே நோக்கி ஓடுகின்ற வண்டியின் மீது முதல்வண்டிக்கு மேல்

உள்ள அந்த நீண்ட நீர்க்குழாயின்மேல் வடக்கு நோக்கி மெல்ல அசைந்து போகத் தொடங்கியது.

அது "இப்போது வடக்கு நோக்கிப் போகின்றேம்" என்று நினைக்கின்றது. அது வடக்கு நோக்கிச் சென்றலும், ரயில் தெற்கு நோக்கிப் போவதனுல் எறும்பின் பிரயாணம் தெற்கே தான் போகின்றது.

அதுபோல், நாம் சதா வேறு பல அவத்தொழிலும், அவச் சொற்களும், அவச் சிந்தனைகளும் உடையவர்களாக இருப்பதனுல், நமது பிரயாணம் தெற்கு நோக்கித்தான் செல்கின்றது.

"அவமாயை கொண்டுலகில்
விருதா அலைந்துழலும்
அடியேனை அஞ்சலென
வரவேணும்"

என்கின்ருர் அருணகிரிநாதர்.

இனி அங்ஙனம் போகாமல், நமது பிரயாணத்தை வடக்கே திருப்ப வேண்டும். அதற்குரிய வழி வகைகளை நன்ருக எடுத்து நமக்கு உபதேசிக்கின்ருர் மாணிக்கவாசக சுவாமிகள். பரிபூரணக் கருணையால், உலகிலுள்ள உயிர்கள் உய்யும் பொருட்டு வற்புறுத்திக் கூறி அருள்கின்ருர்.

பெருமானே! அடியேன் ஆகும் வழியாக 1. உனது திருவடியை நினைந்து உள்ளம் குழைய வேண்டும். 2. மனம் தழலிடைப்பட்ட மெழுகுபோல் உருகவேண்டும். 3 நல்ல மலர்களை எடுத்து மாலையாகத் தொடுத்துத் துதிக்க வேண்டும். 4. உனது புகழை இனிது ஓதவேண்டும். 5. தேவாதி தேவனுகிய உன்னுடைய திருக்கோயிலைக் கூட்ட வேண்டும்; மெழுக வேண்டும். 6. ஆனந்த மிகுதியால் ஆடவேண்டும்.

இந்த ஆறு செயல்களும் ஆகும் வழியாகும்.

"ஆமாறுன் திருவடிக்கே
அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்
துரையேன் புத்தேளிர்
கோமான் நின் திருக்கோயில்
தூகேன் மெழுகேன்
கூத்தாடேன்"

எல்லாம் எதிர்மறை முகத்தால் கூறுகின்ருர். அகங்குழையேன் என்றுல், அகங்குழைய வேண்டும் என்பது பொருள்.

"ஆடுகின்றிலை கூத்துடையான்
கழற்கு அன்பிலை என்புருகிப்
பாடுகின்றிலை, பதைப்பதும்
செய்கிலை, பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை, சூட்டுகின்றதுமிலை
துணையிலி பிண நெஞ்சே!
தேடுகின்றிலை தெருவுதோற
லறிலை செய்வதொன்
றறியேனே"

என்ற திருப்பாடலும் இதே கருத்தில எழுந்தது. "ஆடுகின்றிலை" என்பதனை ஆடவேண்டும் என்று கொள்ளவேண்டும்.

மனைவியையும், மக்களையும், அழிகின்ற பணத்தையும் நினைந்து நினைந்து உருகுகின்றேம். உயிர்க்கு என்றென்றும் துணையாக நின்று உபகரிக்கின்ற அருந்துணையாகிய இறைவனை நினைந்து உருக வேண்டாமா?

திருவடிக்கே அகங்குழைதலும், அன்பால் உருகுதலும் மனத்தின் செயல்; வாழ்த்துதலும் புகழ்ந்துரைத்தலும் வாக்கின் செயல்; பூமாலை புனைதலும் கோயிலைக்

கூட்டி மெழுகுதலும், கூத்தாடுதலும் காயத்தின் செயல். எனவே மனவாக்கு காயத்தால் சிந்தித்தும், வாழ்த்தியும், வந்தித்தும் உய்யவேண்டும்.

இங்ஙனம் உய்யு நெறி யறியாது, நாம் சாகும் வழிக்கே மிக்க விரைவில் போகின்றோம்.

"சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே."

சாகும் வழியைப் பற்றி ஒன்றும் விளக்கம் தரவில்லை. ஆகும் வழிக்குத்தான் விளக்கம் கூறினார். சாகும் வழியைப்பற்றிச்சொல்லக் கூட சுவாமிகளுக்கு மனம் வரவில்லை.

"விரைகின்றேன்" என்ற சொல்லைக் கவனியுங்கள். மலையிலிருந்து உருளுகின்ற ஒருவன் எத்துணை வேகமாக உருளுவானோ, அத்துணை வேகமாக நாம் சாகும் வழியில் சென்று கொண்டிருக்கிறோம்.

நினைக்கும்போதே நெஞ்சம் வெடிக்கின்றது. எத்துணை உருக்கமாகப் பாடுகின்றார்! அத்திருவாசகத்தின் முழு உருவம் அடியில் வருமாறு :

ஆமாறுன் திருவடிக்கே

அகங்குழையேன், அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்

துரையேன்; புத்தேளிர்
கோமான்! நின்திருக்கோயில்

தூகேன் மெழுகேன்
கூத்தாடேன்

சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே.

1956ம் வருஷத்திய ரிஜிஸ்தரேஷன் ஆப் நியூஸ் பேப்பர் (சென்ட்ரல்) விதிகளில் 8வது விதிப்படி "அருள்" என்ற தமிழ் மாதப் பத்திரிகையின் உடைமையாளர் பற்றிய கீழ்க்கண்ட விவரங்கள் பிரசுரிக்கப்படுகின்றன.

பாரம் 4

| | | |
|---|---|---|
| 1. | பிரசுரிக்கப்படும் இடம்: | சென்னை |
| 2. | பிரசுரத்தின் தன்மை : | மாதம் ஒரு முறை |
| 3. | அச்சிடுவோர் பெயர் : | கொண்டா. காசி. சீதாராமன்<br>இந்தியர்<br>ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ்<br>81-5, பாண்டி பஜார்,<br>சென்னை-17 |
| 4. | ஆசிரியர் பெயர் : | T. ராமநாதன் |
| | இனம்: | இந்தியர் |
| | முகவரி : | 231, ஆழ்வார் திருநகர்<br>சென்னை |
| 5. | பிரசுரகர்த்தர் பெயர்: | T. ராமநாதன் |
| | இனம் : | இந்தியர் |
| 6. | இப்பத்திரிகையின் சொந்தக்காரரர் பெயர், விலாசம், மொத்த முதலில் நூற்றுக்கு ஒன்றுக்கு மேல் முதல் போட்டுள்ள கூட்டாளிகள், பங்குதாரர்கள் பெயர்கள், விலாசங்கள். | T. ராமநாதன்<br>231, ஆழ்வார் திருநகர்<br>சென்னை<br>(பூரண உரிமையாளர்) |

ராமநாதன் என்ற நான் இதன் மூலம் தெரிவித்துக்கொள்வது என்னவென்றால், மேலே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் அனைத்தும் நானறிந்த மட்டில் உண்மை.

(ஒப்பம்)

1—3—72

T. ராமநாதன்
பிரசுரகர்த்தர்

# அவதார புருஷர்கள்



பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

குருஸ்தானம் வகிப்பதை சிலர் தொழிலாக வைத்திருக்கின்றனர். அப்படிச் செய்வது சரியன்று.

குருவும் இஷ்ட மூர்த்தியும் ஒன்றே. குருவானவர் சிஷ்யனுக்கு இஷ்ட தெய்வத்தைக் காட்டிக் கொடுத்துவிட்டு, தான் அந்த இஷ்டதெய்வத்தில் லயமாகிறார்.

மரம் வெட்டுகிற ஒருவன் பெரும்பகுதியைச் சிரமப்பட்டு வெட்டி முடிக்கிறான். பிறகு அவன் நின்று பார்த்துக்கொண்டிருக்கிறபொழுது, வெட்டுப் படாது எஞ்சியிருக்கிற பகுதி தன்னைத் தானே ஒடித்துக் கொண்டு தரையில் தடால் என்று விழுகிறது.

மரத்தின் வெட்டிய பகுதிக்கு நிகர், குரு சிஷ்யனுக்குச் செய்து வைத்த ஆத்ம பரிபாகம். மரம் தானே ஒடிந்து விழுவதற்கு நிகர், சிஷ்யன் எடுத்துக்கொண்ட சுயப்பிரயத்தனம்.

குருஸ்தானத்தில் இருந்து கொண்டு தன்னை அகங்காரமற்றவனாக வைத்திருப்பது மிகக் கடினம். மற்றவர்களெல்லாம் போற்றும்பொழுது, தன்னையறியாது அவனுக்குத் தற்பெருமை

யும் கௌரவமும் வருகின்றன. ஆதலால் குருஸ்தானம் வகிப்பது மிக ஆபத்தானது.

ஈசன் ஒருவரே உண்மையில் எல்லார்க்கும் குரு. அவர் ஆட்டு வித்த பிரகாரம் நான் ஆடுகிறேன், அவர் பேசுவித்த பிரகாரம் நான் பேசுகிறேன் என்று உணர்ந்து, குருஸ்தானம் முழுதையும் ஈசனிடம் ஒப்படைத்து விடுவது நலம்.

தன் குருவை வெறும் மானுடனுகக் கருதுபவன், ஆத்ம சாதனத்தில் முன்னேற்றம் அடையான். சச்சிதானந்தப் பொருள், ஒருவனுடைய குரு என்னும் மேனியின் மூலமாக இலங்கி, மந்த்ரோபதேசம் செய்கிறது. ஆதலால் தன் குருவையே சச்சிதானந்தமாகக் கருதுபவன் தான் முன்னேற்ற மடைகிருன்.

பரிபக்குவமடையாத ஆசாரியர்கள், பொருந்தியவர்கள் பொருந்தாதவர்கள் ஆகிய எல்லோரையும் சிஷ்யர்களாக்குகிருர்கள். அத்தகைய சிஷ்யர்களோ கொஞ்சகாலம் ஓர் ஆசாரியனிடத்திருப்பதும், பிறகு மற்ருேர் ஆசாரியனிடம் போவதுமாக நடந்து கொள்கின்றனர். சாதகர்களுடைய இயல்பை நிதானமாயிருந்து அறிந்துகொள்ளுதற்கு முன்பு, அவர்களை சிஷ்யர்களாக்குவது முறையன்று.

குரு பக்திக்கு எடுத்துக் காட்டாக ஏகலைவன் விளங்குகிருன். துரோணுசாரியர் தேகம் தாங்கியிருந்த அதே காலத்தில், மண்ணுல் அவருடைய வடிவம் ஒன்று செய்து வைத்துக்கொண்டு குரு பக்தி பண்ணி, தனுர் வித்தையை முழுதும் அவன் கற்றுக் கொண்டான். குரு விசுவாசம் வைக்கிறவன் அனைத்தையும் அடையப் பெறுகிருன்.

ஆத்ம சாதனங்கள் புரிவதற்கு குரு அவசியமா?

ஆம், பெரும் பாலோர்க்கு குரு தேவை. குரு வாக்கியத்தில் விசுவாசம் வைத்து அவரைக் கடவுள் சொரூபமாகக் கருதுகிறவன் சாதனத்தில் முன்னேறுகிருன். ஆதலால்தான் வைஷ்ணவர்கள் கிருஷ்ணன், குரு, பக்தர் ஆகிய மூவருக்கும் சம அந்தஸ்து கொடுக்கின்றனர்.

ராமன் ஒரு ஆவதார மூர்த்தியென்று பன்னிரண்டு ரிஷிகள் மட்டும் அக்காலத்தில் அறிந்திருந்தனர். மற்றவர்கள் அவனை தசரதராமன் எனக் கருதினர்.

குருவும் இஷ்ட தெய்வமும் ஒன்றே! சாதகனை சர்வேசுவரனோடு இணைத்துவைப்பவர் குரு.

ஈசுவரானுபூதி வாய்க்கும் பொழுது, உள்ளத்தினுள் இருக்கும் அக்ஞான இருள் நீங்குகிறது. பக்தியின் இனிமையை ரசித்தல் பொருட்டு, பரம் பொருளை அவதார மூர்த்தியாக வைத்து பக்தர்கள் போற்றுகிருர்கள்.

குருவின் துணையின்றி ஒருவன் கடவுள் காட்சியைப் பெற முடியாதா?

சச்சிதானந்தப் பொருளே குருவாக வருகிறார். சாதகன் ஒருவனுக்கு அவனது இஷ்ட தெய்வத்தின் காட்சியைக் கொடுத்தருளிவிட்டு, குருவானவர் இஷ்ட தெய்வத்தினுள் லயமாகிவிடுகிறார்.

ராமானுஜாசாரியர் ஒரு விசிஷ்டாத்வைதி. ஆனால் அவருடைய குரு யமுனாசாரியர் ஓர் அத்வைதி. ஆதலால் இருவருக்குமிடையில் விவாதங்கள் ஏராளமாக நிகழும். ஆனால் அதை முன்னிட்டு குரு சிஷ்யபாவனை மாறவில்லை.

குருஸ்தானத்தை வகிக்க எல்லோரும் தகுதி வாய்ந்தவர்கள் அல்லர். பெரிய மரம் ஒன்று நதியில் மிதந்துகொண்டு போகிறது. அதன்மீது மிருகங்களையும் கூட ஏற்றிக்கொண்டு போகலாம். அப்பெரிய மரம் போன்றவர்கள் நாரதர் முதலாயினோர். ஆனால் பயனற்ற ஒரு சிறு கட்டை அதற்கு உதவாது. ஒரு மனிதன் அதன் மீது உட்கார்ந்தால், அக்கட்டையும் மனிதனும் சேர்ந்து மூழ்கிப் போவார்கள்.

நாணல் ஒன்று தன்னளவில் நீரின்மீது மிதக்கிறது. அதன் மீது ஒரு சிறு குருவி உட்கார்ந்தாலும் அது மூழ்கிப்போம். ஆனால் பெரிய மரக்கட்டை ஒன்றோ, தான்மட்டும் மிதப்பது அல்ல; அது மிதக்கும்பொழுது பலபேர் அதன்மீது உட்கார்ந்திருக்கவும் இடம் கொடுக்கிறது. தங்கள் சொந்த முக்தியைக் கவனித்துக் கொள்பவர்கள் நாணல் போன்றவர்கள். உலகை உய்விக்கவந்த பெருமக்கள் பெரிய மரக்கட்டை போன்றவர்கள்.

தவளை ஒன்று நீர்ப்பாம்பிடம் அகப்பட்டுக் கொண்டால், பாம்பு, தவளை ஆகிய இரண்டுக்கும் திண்டாட்டம். விழுங்க முடியாது பாம்பு திண்டாடுகிறது; தப்பித்து ஓட முடியாது தவளை திண்டாடுகிறது. ஆனால் ஒரு நாகசர்ப்பத்திடம் அதே தவளை அகப்பட்டுக்கொள்ளுமாகில், மூன்று தடவை கத்துதற்கு முன்பு அது விழுங்கப் படுகிறது.

ஈசுவரானுபூதி அடையப் பெறாதகுரு, நீர்ப்பாம்புக்கு நிகராகின்றார். அத்தகைய குருவும், அவரைச் சார்கிற சிஷ்யர்களும், தங்கள் அக்ஞானத்தையோ அகங்காரத்தையோ அகற்ற முடியாது அல்லல்படுகின்றனர். ஆனால் நல்ல ஞானகுரு ஒருவரிடம் சேருகிற சிஷ்யர்கள், விரைவில் பரிபக்குவம் அடைகின்றனர்.

தசாவதாரங்களில் ஒருவர் புத்தர். யார் ஒருவன் தன் புத்தியை பிரம்மத்தில் ஒடுக்கிவிடுகின்றானோ, அவன் புத்தனாகின்றான்.

தன் பொருட்டு பகவான் அவதரித்து வந்திருக்கிறார் என்று பக்தன் கருதுகிறான். ஆனால் ஞானியோ அத்தகைய கொள்கையுடையவன் அல்லன்.

அவதார புருஷர் ஒருவரை மக்கள் எளிதில் அறிந்துகொள்ள முடியாது. மற்ற மனிதர்களுக்கு வருகிற பிணி, தாகம், பசி முதலியன அவதார புருஷர்க்கு உண்டு.

பக்தர்களிடத்து பக்தியை ஓங்குவித்தல் பொருட்டு, பரம்பொருளே மானுடவடிவெடுத்து வருகிறார். மானுடவடிவம் எடுத்திருப்பவரை நேசிப்பது மானுடர்க்கு மிக எளிதாகிறது.

பகவான் எப்படி மானுடனாக அவதரிக்கிறார் என்பதை, உபமானத்தைக்கொண்டு நாம் அறிந்துகொள்ளமுடியாது. அதற்கேற்ற மனோபாவம் வரும்பொழுதே, அதை நாம் ஒருவாறு அறிந்துகொள்ளமுடியும்.

ஈசுவர அவதாரத்தை ஞானி ஏற்றுக் கொள்வதில்லை. சச்சிதானந்த சாகரத்தில் கிளம்பும் பெரிய அலைக்கு ஒப்பானவன் அவதாரமூர்த்தி என்பது, ஞானியின் கொள்கை.

ஸ்ரீராமனை வனத்தில் சந்தித்த ரிஷிகள், தங்கள் கருத்தை அவனிடம் தெரிவித்தார்கள்: "பரத்வாஜர் போன்றவர்கள் உன்னை அவதார புருஷன் எனலாம், ஆனால் நாங்களோ, நாதப்பிரம்மத்தில் திருப்தியடைந்தவர்களாயிருக்கிறோம். பிரம்மம் மானுட வடிவு எடுப்பது எங்களுக்கு வேண்டாம்.''

அதைக்கேட்ட ஸ்ரீராமன் மகிழ்வுற்றவனாய் ஒன்றும் பேசாது போய்விட்டான்.

வானத்தினின்று வருகிற நீர் வீட்டுக் கூரையின்மீது விழுந்து, ஒரு குழாய் வழியாக வெளியே வருகிறது. அதே விதத்தில் பரம்பொருள் அவதார மூர்த்தி என்னும் வடிவத்தின் வாயிலாகத் தன்னை விளக்கிக் காட்டுகிறது. ஸ்ரீ ராமன் ஓர் அவதார மூர்த்தி என்பதை பரத்வாஜர் போன்ற பன்னிரண்டு ரிஷிகள் மட்டும் அறிந்து கொண்டனர். மற்றவர்களுக்கு அவன் மகிமை விளங்கவில்லை.

மக்களுக்கு பக்தியையும் நல்லொழுக்கத்தையும் புகட்டுதல் பொருட்டு, பரம்பொருள் யுகந்தோறும் மானுட வடிவெடுத்து வருகிறார்.

ஒவ்வொரு யுகத்திலும் சர்வேசுவரனே ஜகத் குருவாக அவதரித்து வருகிறார். சச்சிதானந்த சொரூபியாகிய ஈசன் ஒருவரே குரு ஆகிறார்.



# சகல தேவதைகளையும் ஆராதித்த பலன்



ஜகத்குரு
ஸ்ரீ காமகோடி ஆச்சார்ய
ஸ்வாமிகள்

அம்பிகையினுடைய பிரஸாதத்தைப் பரிபூர்ணமாக அடைந்த ரிஷிகளுக்குள், துர்வாஸர் சிறந்தவர். அவர் அம்பிகை விஷயமாக 'ஆர்யாத்விசதி' என்று 200 சுலோகங்கள் சொல்லியிருக்கிறார்.

ஆர்யா விருத்தம் என்பது ஒருவகை சுலோகம். அந்தச் சுலோகங்கள் 200 கொண்டது ஆர்யா த்விசதி. அதற்கப்புறந்தான் மற்ற கவிகளுடைய வாக்கு உண்டாயின. அம்பிகை அந்த வாக்கில் ஆவிர்ப்பவித்திருக்கிறதுபோல, அநுபவிக்கிறவர்களுக்குத் தெரியும்.

ஸ்ரீசக்கரத்தை நாற்பத்து முக்கோணமென்பார்கள். ஆவரண தேவதைகள் பலர் அதில் உண்டு. மேல் உள்ள பிந்துஸ்தானத்தில் காமேசுவரனுடைய வாம பாகத்திலுள்ள காமேசுவரியாகிய அம்பிகை இருக்கிறாள். அவளைத் துர்வாஸர் ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறார்.

அது மிகவும் உத்கிருஷ்டமான கிரந்தம். பாராயணம் பண்ணினால் நல்ல அநுக்கிரகம் உண்டாகும், நல்ல வாக்கு உண்டாகும்.

கவித்வசக்தி அம்பிகையை ஸ்தோத்திரம் பண்ணுவதன் பிரயோஜனமாக உண்டாவது. அம்

பிகையின் உபாஸனு விசேஷத்தால் ஓர் ஊமை வாக்குப் பெற்று, 500 சுலோகங்கள் சொல்லியிருக்கிருர். அவை மூக பஞ்ச சதி என்று வழங்கப்படும், ஆர்யா சதகம், பாதாரவிந்த சதகம், ஸ்துதி சதகம், கடாக்ஷ சதகம், மந்தஸ்மித சதகம் என்று ஐந்து சதகங்கள் சேர்ந்தவை தான் மூகபஞ்ச சதி என்பது.

துர்வாஸர் 200 ஆர்யா விருத்தங்கள் சொன்னுர். மூக பஞ்ச சதியில் ஒவ்வொன்றிலும் 100 ஆர்யாவிருத்தங்கள் இருக்கின்றன. இந்த இரண்டும், நல்ல சித்திரக்காரன் அம்பிகையின் ஸ்வருபத்தை எழுதிக் காட்டுகிற மாதிரி, மனத்துக்குத் தோன்றும்படி செய்கின்றன. கண்ணுக்கும் மனத்திற்கும் எட்டாத வளைக் காட்டுகிற மாதிரி இருக்கின்றன.

இவைகளைத் தவிர, அம்பாள் விஷயமான ஸ்தோத்திரமாக, நம்முடைய ஆசார்யர்கள் சொன்ன ஸௌந்தர்யலஹரி இருக்கிறது. காம்பீர்யம் எவ்வளவு உண்டோ அவ்வளவும் அதில் இருக்கிறது. மார்தவம் மிகுந்து இருப்பது மூகபஞ்சதி.

அம்பிகையை ஆராதித்தால் ஸகல தேவதைகளையும் ஆராதித்த மாதிரியாகும் என்ற அர்த்தத்தைத் தரும் ஒரு சுலோகம் ஸௌந்தர்யலஹரியில் இருக்கிறது.

ஸத் என்பது உண்மையான வஸ்து. சித் என்பது அறிவான பொருள். ஸத்யம் எல்லாம் ஈசுவர ஸ்வரூபம். அதை அறிவதற்கு அறிவுவேண்டும். அது அம்பிகை ஸ்வரூபம்.

ஸத்தை ஈசுவரனுகவும், சித்தை அம்பிகையாகவும் சொல்லுவதுண்டு. அறிகிறது இல்லை என்ருல், உள்ளதால் பிரயோஜனமில்லை. இரண்டும் ஒன்றேதான்.

எல்லாச் சாஸ்திரங்களும் முடிவில் ஞானமடைவதைத்தான் சொல்லுகின்றன.

ஸாக்ஷாத் ஞானம்தான் மோக்ஷ ஸாதனம். ஞான ஸ்வரூபிணீ பரதேவதை. அவள் அநுக்கிரஹம் பெற்ருல் ஜன்ம விடுதலையாகி மோக்ஷமடையலாம்.

ஸஹஸ்ர இதழ்களையுடைய தாமரை, சிரஸுக்குமேல் பிரம்மரந்திரத்தில் இருக்கிறது. அதில் சந்திரபிம்பத்துள் அம்பிகை இருக்கிருள். சிரஸ் ஜ்ஞானஸ்தானம். அங்கிருந்து பிரவஹிக்கும் அமிர்த தாரையால் பேரானந்தம் உண்டாகிறது.

ஸ்ரீவித்யையாக அம்பிகை அங்கே இருக்கிருள். அவளை ஆராதித்தால், ஞானம் ஆவிர்ப்பாவமாகி அஜ்ஞானம் போகும். இது ஸௌந்தர்யலஹரியில்

சொல்லப் பட்டிருக்கிறது. ஆர் யாத்விசதியிலும் மூகபஞ்ச சதியிலும், அம்பிகையை உபாஸிப்பதால் ஞானம் உண்டாகும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அதனுல்தான், அம்பிகையை ஆராதிப்பது எல்லாத் தேவதைகளையும் ஆராதித்தமாதிரி ஆகின்றது. நாமாக ஆராதிக்காவிட்டாலும், பெரிய ரிஷிகளும் மகாத்மாக்களும் அம்பிகையை ஆராதித்த கோயில் முதலிய இடத்திற்குப் போய் வணங்கினுல், அம்பிகை கடாக்ஷம் ஏற்பட்டு எந்தக் காலத்திலும் க்ஷேமமாக இருக்கும் அநுக்ரஹம் கிடைக்கும்.



# தனித்து இருக்கும்போதுதான் மெய்யுணர்வு வெளிப்படும்

மஹரிஷி அரவிந்தர்

இறைவெளிப்பாடு என்பது நேரான காட்சியே. அது நேரடியாகவே செவியில் ஒலித்த ஒன்றாகும். அல்லது தெய்விக அகத்தூண்டுதலால் பிறந்த உண்மையின் நினைவாகும். இவை திருஷ்டி, ச்ருதி, ஸ்மிருதி என்று வடமொழியில் வழங்கப்படும். இதுதான் உயர்வற உயர்ந்த அனுபூதிச் செல்வம்.

இது எஞ்ஞான்றும் மீண்டும் மீண்டும் அனுபூதி நெறியால் அணுகத்தகும் இயல்பு வாய்ந்தது. இது இறைவனால் அருளப்பட்டது என்பது மட்டுமன்று. இதை ஆன்மாவே நேரில் கண்டுவிட்டதென்று, நான் மிகமிகச் சான்றுவலிமையாகக் கொள்ளும் ஆரணங்கள் அறைகின்றன.

வேதம் வழங்கிய சொல் பொய்க்காத மொழியே. நம்முடைய உளமும் பகுத்தறிவும் அதற்கு நல்கும் உரைதான், அதற்கு இழைத்த தவறாகும்.

சமயக்கருத்திலும் மத உணர்விலும் இழிதகைமை, குறுகிய மனப்பான்மை, கருத்து ஆழமின்மை இவற்றை அறவே அகற்றுவாயாக. ஆனால் மிக விரிந்த அடிவானங்களைக் காட்டிலும் விரிந்து நிற்பாய். "கஞ்சஞ்சங்கா" என்னும் வான் உயர் வரைச் சிகரத்தினும் ஓங்கி நிமிர்வாய். அளப்பரும் ஆழ்கடலினும் ஆழம் உடைத்தாய்க் காட்சியளிப்பாய்.

பரமனின் பரந்த பார்வையில் அண்மையுமில்லை, சேய்மையுமில்லை. கழிவு. நிகழ்வு, எதிர்கால எல்லைகள்தாம் உளவோ? இந்த உலகமாம் ஓவியத்தைத் தீட்டுவதற்காகத் தாமே கொண்ட தொலை அணிமைக் காட்சியமைவுகளாய், இறைவனுக்குத் தக்கபடி இவை இலங்குகின்றன.

இப்புவியைச்சுற்றி ஞாயிறு வலம் வருவது என்பது, ஐம்பொறிகளுக்கு எப்பொழுதுமே ஓர் உண்மையாய் விளங்கும். ஆனால் இது பகுத்தறிவுக்கு ஒரு பொய்த்தோற்றமே. இந்த ஞாலம்தான் வெய்யோனை வளைந்து வருகின்றது என்பது

பகுத்தறிவு என்றுங் கண்ட உண்மையாகும்.

ஆனால் ஒரு தெய்வ வான்காட்சிக் கோணத்திலிருந்து நோக்குமிடத்து, இதுவும் வாய்மையன்று. புவியும் திரியவில்லை, கதிரவனும் சுற்றவில்லை. செங்கதிர்ச் செல்வனின் நிலையுணர்வு, இவ்வையகத்தின் நிலையுணர்வு, இவற்றின் தொடர்பிலே எழுகின்ற மாறுதலைத் தவிர வேறொன்றுமில்லை.

விவேகானந்தர் துறவறத்தின் வான் பெருமையைப் புகழுமிடத்து, நம் நாட்டு முழு இந்திய வரலாற்றிலேயே ஒரு ஜனகன் தான் திகழ்ந்ததாகத் தெரிகின்றது என்று இயம்பியுள்ளார். அவர் உரைத்தது உண்மையன்று. ஜனகன் என்பது தனி ஒருவனின் பெயரன்று. தம் ஐம்புலன்களின் மீது ஆட்சி புரிந்து செந்நெறிச் செல்வர்களாய் மிளிர்ந்த மன்னர் குலத்தையே அச்சொல் சுட்டும். மேலும் ஒரு லட்சியத்தின் வெற்றி முழக்கமாய் அவ்வுரை ஒலிக்கின்றது.

காவியணிந்த துறவிகள் லக்ஷக் கணக்காய் உள்ளார்கள். ஆனால் இவர்களிடையே எத்தனை பேர்கள் முழுநிறைவாய் இலங்குகின்றார்கள் என்று ஒருவர் வினவலாம். ஆயினும், இந்தக் குறிக்கோளை சிலர் எய்தியுள்ளனர். பலர் அணுகியுள்ளனர். இக்காரணம் பற்றியே இதை நேர்மையென நிறுவ இடமுண்டு.

இத்துறவறம் பரக்க ஓதப்பட்டிருந்தது. செயல்முறைப் படுத்தியவரும் பலர். ஆகவே உள் நிறைவு பெற்ற துறவிகள் நூற்றுக்கணக்காய்த் திகழ்ந்தார்கள். இந்தக் குறிக்கோள் முன் போலவே சுடர்விடுமானால், நூற்றுக்கணக்கான ஜனகர்கள் நம்மிடையே காட்சியளிப்பார்கள் என்பது திண்ணம்.

துறவறத்திற்குரிய விதிமுறையுடையும், புறச் சின்னங்களும் உண்டு. அவற்றால் அந்தத் துறந்த நிலையை எளிதில் உணர்ந்து கொள்ள இயலும் என்று மக்கள் கருதுகிறார்கள். ஜனகன்போல் உள்ள ஒருவன், தன் உள்ளத் துறவை பறையடிக்காமல், நாட்டு மக்கள் பூணும் உடையையே அணிகின்றான். நாரதர் கண்களும், இத்துறவை அறியமுடியா வண்ணம் ஏமாந்து குருடாய்ப் போய்விட்டனவாம்.

வையக வாழ்வை ஏற்றே உயர் துறவறச் சுதந்திரத்தோடு உறைவது மிகவும் அரிதே. அது அவ்வண்ணம் அரிதாயிருக்கும் அக்காரணத்தினாலேயே, அத்துறையிலிறங்கி அதை ஆற்றவேண்டுமன்றோ?

ஜனகனுடைய செயல்களை உற்றுநோக்கிய தெய்வ முனிவனாகிய நாரதரும்கூட, அவரை இன்ப வாழ்க்கையில் திளைக்கும் ஒரு காமுகனாய்க்கருதினார். ஆன்ம ஒளியை அறியாவிடத்து, ஒருவனை முத்தனோ (விடுபட்டவனோ)

அல்லது பத்தனே (கட்டுப்பட்டவனே) என்று எப்படி இயம்பக் கூடும்?

தான் எய்திய வரம்பைத் தாண்டி நிற்கிற அனைத்தும், மனிதன் அடைவதற்கு அரிதாய்த் தோன்றும். தன்னுடைய தனிப்பட்ட முயற்சியால் அவை கடினமாய் இருந்தாலும், உள்ளத்தில் உறைகின்ற உத்தமன் உன்னை உய்விக்கும் அந்த ஒப்பந்தத்தை ஏற்றால், எல்லாம் யாதொரு சிக்கலின்றி எளிதாய்ப் போய்விடும்.

கதிரவனின் கூட்டமைவையோ அல்லது செவ்வாயின் கோடுகளையோ ஆராய்வது, ஒரு மாபெருஞ் செயல் என்பதில் யாதோர் ஐயமும் இல்லை. ஆனால் நீ ஒரு ஓவியத்தை நோக்குகிற வண்ணம் மனிதனின் ஆன்மாவையும் அளக்கக்கூடிய கருவி உன் கையில் சிக்குமாயின், பௌதிக விஞ்ஞானம் கண்ட அற்புதங்கள் அனைத்தும் வெறும் குழவிகளின் விளையாட்டுப் பொருள்கள் என்றெண்ணிப் புன்முறுவல் கொள்வாய்.

அறிவென்பது, தன்னுடைய செயல்களைக்கண்டு பெருமிதம் கொள்ளும் சேயாகும். அது ஏதாவது ஒன்றைப் புதிதாய்க் கண்டு பிடித்துவிட்டால், தெருக்கள் தோறும் உரத்த குரலில் கூச்சலிட்டு ஓடும். பழுத்த ஞானமோ, தான் உணர்ந்ததை நீண்டகாலம் சிந்தை நிலவும் பேரமைதியில் மறைத்து வைத்துவிடும்.

எல்லா அறிவு வட்டங்களையும் வென்றுவிட்டது போல நவின்று நடிக்கும் விஞ்ஞானம். ஆனால் உயர் ஞானத்தின் செவியிலோ, அறிவு தனித்து நடமாடும். அதன் அவசரம் எங்கேயோ எண்ணிறந்த கடல்களின் ஓரத்தை முரல்வது போல் ஒலிக்கும்.

மனத்தைக் கரந்தே ஈர்க்கும் ஒன்றிலிருந்து விலகி ஓடுவதோடல்லாமல், அதன் இருப்பையும் இல்லையென்று வெறியோடு எதிர்க்கும் இயல்பின் சின்னம் தான் பகையாகும். இத்தகைய திருவிளையாடல்தான் ஆண்டவன் தன் படைப்பில் புரிகின்றான்.

பாவம் என்பது தன்னலம் பேணுவதே. தீதென்பது இழிதகைமையே. குற்றத் தண்டனைக்குரியது பகையே. மற்றவையனைத்தையும் நல்லவையாக மாற்ற இயலும். இவைதாம் இறைவனை எதிர்க்கும் வன்கணாளர்கள் (அரக்கர்கள்).

பரம்பொருளை முழு எண்ணுகைக் கொண்டு, மீண்டும் மீண்டும் நெடிதே தொடர்ந்து வரும் ஒருபதின் கூற்றுப் பின்னம் தான் இவ்வுலகமாகும். காலக்கூறு தொடங்குவதும் முடிவதுமாகத் தோன்றும். ஆனால் அந்தப் பின்னம் எப்பொழுதும் திகழ்ந்துகொண்டு இருக்கும். உண்மையில் அதற்கு ஒரு தொடக்கமும் இல்லை, முடிவும் இல்லை.

பொருள்களின் தொடக்கம் இறுதி என்பவைகூட, நம்முடைய அனுபவத்தைச் சுட்டக்கூடிய மரபு பற்றி வந்த உரைதான். உண்மைநிலையிலே இந்தத் தொடர்களுக்கு உள் பொருள் இல்லை. ஓதுமிடத்து, ஒன்றிற்கு இறுதியுமில்லை தொடக்கமு மில்லை.

"நானும் சரி, நீயும் சரி, இந்த வேந்தர்களும் சரி, முன்பு இல் லாத நாளுமில்லை, இனி இருக்க மாட்டார்கள் என்பதும் இல்லை." பிரம்மமும் சரி, அதில் அடங்கி யுள்ள மன்னுயிர்களும் பொருளும் சரி, அழிவற்றவையே. ஆனல் அவற்றின் படைப்பும் அழிவும் நம்முடைய புறஉணர்விற்கு ஒளிந்து ஓடும் விளையாட்டே யாகும்.

தனிமைபால் வைக்கும் ஆர்வம் தான், அறிவை நாடும் சார்பு நிலையின் சின்னமாகும். பெரும் கூட்டத்திலும், செருக்களத்தி லும், அங்காடிச் சந்தையிலும், தனிமையுணர்வை எய்துங்கால் நீ முழு அறிவை யடைந்தவனுவாய்,

அருஞ்செயல்களை ஆற்றி அவற் றின் மாபெரும் விளைவுகளை எழுப் பும் பொழுதும், நீ ஒன்றும் புரிய வில்லை என்று உணரும் கணத்தில் தான், உன் கண்களை மூடியிருந்த அஞ்ஞான அச்சினை கடவுள் அகற் றினதாகக் கண்டுகொள்வாய்.

ஒரு வரையின் உச்சியின்மீது தனித்து அசைவற்று மோனத் டன் அமர்ந்து, கீழே நிகழும் மாபெரும் புரட்சிகளை நோக்க உன்னல் இயலுமாயின், அப் பொழுதுதான் நீ தெய்வக்காட்சி பெற்று வெறுந்தோற்றங்களி லிருந்து விடுபட்டவன் ஆவாய்.

செயலின்மையை விழைவது அறிவீனம். அதை இகழ்வது மதி யீனமே. செயலின்மை எங்கணும் இல்லையென்பதை உணர்வாய். மணலின்மீது கிடக்கும் ஒரு கல்லை ஏதோ உன் சோம்பற்போழுதில் உதைத்துப்பார். அதன் அதிர்ச்சி கோளங்கள் மீதும் விழக் காண் பாய்.

ஒரு கருத்தினல் நீ ஏமாந்து போகாமல் இருக்கும்படி விரும்பி ஞல், முதலில் அக்கருத்து எந்த அளவில் உண்மையெனத் தேர் வாய். பிறகு அதற்கு மாறுபட் டது அல்லது முரண்பட்டது, எந்தமுறையில் உண்மையாக இருக்கக்கூடும் என்பதை ஆராய் வாயாக. முடிவில் இவற்றின் மாறுதல்களுக்குள்ள காரணத் தையும் உணர்ந்து, இறைவனின் ஒழுங்கிசையைப் புலப்படுத்தும் திறமைபோலவும் கண்டுகொள் வாய்.

[ நன்றி; ஞானதீபம் ]



# விஷங்களுக்குச் சில கண்கண்ட மருந்துகள்

ஸ்ரீ வி. பலராமய்யா

### பயித்திய நாய்கடிக்கு

| | |
|---|---|
| இளங்கத்தரிக்காய் | 3 |
| கரும்பு வெல்லம் | 5 கி. |
| கருப்பு எள்ளு | 5 கி. |

இவற்றை கூட்டி அரைத்துக் கொண்டு, 3 வேளைகளாகப்பிரித்து நாள் 1க்கு ஒரு வேளை காலையில் வெறும் வயிற்றில் 3 நாட்களுக்கு கொடுக்க விஷம் தீரும். இது கைகண்டது;

பத்தியம் : உப்பு சேர்க்கக் கூடாது. பால் சர்க்கரை சேர்த்து சாப்பிடலாம். உப்பில்லாமல் நொய்க் கஞ்சி கொடுக்கவும்.

4-ம் நாள் உப்பை வறுத்துக் கூட்டவும். புளிகூடாது. அப்படி 3 நாள்.

7ம் நாளிலிருந்து உப்பு புளி எப்போதும் போல் சேர்த்துக் கொள்ளலாம்.

பிறகு 3 மாதங்கள் வரை· வாழைக்காய், வாழைப்பழம், கொத்தவரைக்காய், சேப்பங் கிழங்கு, சுரைக்காய், கோழி, கருவாடு சாப்பிடக் கூடாது.

### நாய்க் கடியினால் வெறி பிடித்து வந்தால்:

முதலில் கத்தரிவேர் 10 கிராம் எடுத்து தட்டி, 2 டம்ளர் தண்ணீரிலிட்டு காய்ச்சி, $\frac{1}{2}$ டம்ளராக சுண்ட வைத்து உள்ளுக்கு கொடுத்து, பிறகு ஷை கத்தரிக் காய் மருந்தை கொடுக்கவும்.

மேற்பூச்சுக்கு :

கடித்த வாயில் கோழியின் மலம் பூச நாய் விஷம் இறங்கி விடும்.

## 2. மற்ற விஷயங்கள்

சர்ப்பம்
ஜலமண்டலி
நட்டுவாக்களி
தேள்
பூரான்

செய்யான்-முதலிய கடிகளுக்கு லகு வைத்தியம்;—

படிக்காரம் என்னும் சீனக்காரத்தைப் பொடிசெய்து 1 சிடிகை $\frac{1}{4}$ டம்ளர் தண்ணீரில் அல்லது அரிசி கழுவிய நீரில் கலந்து, உள்ளுக்கு 3 மணிக்கொருமுறை இரண்டு முறைகள் கொடுக்க விஷமிறங்கிவிடும்.

இதற்காகவே திருஷ்டி கழிப்பதென்று பெரியோர்கள் வீட்டில் படிக்காரத்தை குறிப்பிட்ட இடதித்ல் கட்டி வைப்பர்.

ஜலமண்டலி கடித்தால்-கடித்த இடத்திற்குக் கீழ் உடலெல்லாம் வியர்வை தண்ணீர் போல் சுரந்து கொட்டும். வாந்தி, மயக்கம் உண்டாகும்.

இதற்குத் தேங்காயை உடைத்து அதிலிருக்கும் வெள்ளைப்பருப்பை எடுத்து, 2 அங்குல நீளம் $\frac{1}{2}$ அங்குல அகலம் மென்று சாப்பிடவும். குழந்தைகளுக்கு அரைத்து உள்ளுக்கு கொடுக்கவும்.

ஜலமண்டலி விஷம் உடனே குணமாகும்.

தேள் கடிக்கு: நவசாரம் 2 சிடிகை, வெற்றிலையோடு போடும் சுண்ணாம்பு (ஈரத்துடன்) 1சிடிகை -இரண்டையும் உள்ளங்கையில் வைத்து தேய்த்து, அதில் வரும் நெடியை தேள் கொட்டியவர்கள் மூக்கில் இழுக்கவும்.

1 நிமிடத்தில் ஏறிய விஷம் இறங்கிவிடும்.

"விஷமை" யென்று ஒரு மருந்திருக்கிறது. இது ஒவ்வொரு வீட்டிலும் இருக்கவேண்டும். இம் மருந்து, நெ. 3, பட்டினத்தார் கோயில் வீதி, திருவொற்றியூர், சென்னை-19ல் இருக்கும் சுவாமி தீனதாஸ் மருந்து செய் சாலையில் கிடைக்கும். 5 கிராம் மருந்தை வைத்துக் கொண்டு 100 நோயாளிகளைக் குணப்படுத்தலாம். 5 கிராமின் விலை ரூ. 5/- வேண்டுவோர் முன்பணம் அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

இம்மருந்தை தேள் கொட்டிய இடத்தில் லேசாக தேய்த்து கொஞ்சம் அனல் காட்டினால், சில வினாடிகளில் பாதையால் துடிக்கும்நோயாளி சந்தோஷமடைந்து திரும்புவான். 100க்கு 99 கேஸ்கள் குணம் கண்டது ஆசிரியரின் அனுபவம்.

இம்மருந்தையே நாய்க்கடி, பாம்புகடி, பூனைகடி, எலிகடி முதலிய எல்லா விஷங்களுக்கும் கொடுத்து ஆச்சரியமான குணம் பெறலாம்.

## சாதாரண நாய் கடிக்கு

ஊமத்தன் இலையை கையால் நசுக்கி 3 சொட்டுகள் பசும்பாலில் விட்டு வெறும் வயிற்றில் காலையில் கொடுக்கவும்.

பத்தியம்: அன்று உப்பில்லாக் கஞ்சி அல்லது பால் சாதம் மாத்திரம் சாப்பிடவும்.

மற்றொருமுறை: கோவையிலையை கையால் கசக்கி,நாய் கடித்த

இடத்தில் வைத்து 3 கட்டுகள் 3 நாட்களுக்கு கட்டவும். அதேயிலையின் ரசத்தை 20 சொட்டுகள் பசும் பாலில்விட்டு 1 நாளைக்கு மாத்திரம் கொடுக்கவும். நிச்சயமான குணத்தைத் தரும்.

இலைகள் கிடைக்காத நேரமாகவோ அல்லது இடமாகவோ இருந்தால்,உடனே மேற்சொன்ன படிகாரத் தண்ணீர் கொடுத்து படிகாரத் தூளைக் கடித்த இடத்தில் வைத்து அழுத்திவிடவும்.

மேற்சொன்ன மருந்துகளெல்லாம் பரிசோதித்தவை.பயமில்லாமல் 100க்கு 100 வெற்றி பெறலாம்.

இதை விட்டு ஆஸ்பத்திரிகளுக்குப்போய் தொப்புள் சுற்றி 14 ஊசிகள் போட்டுக் கொண்டு வேதனை அடைய வேண்டாம்.

தேள்கொட்டியதற்கு கொட்டிய இடத்தில் டாக்டர்கள் ஊசி போட்டு, ரத்தக்கசிவும் வீக்கமும் உண்டாக்கிக்கொண்டு தலைவலி போய் திருகுவலி வந்த மாதிரி அவஸ்தையுறுதீர்கள்.

○

# ராஸக்ரீடையின் வர்ணனம்

ஸ்ரீ எம். கே. வேங்கடராம ஐயர்

ஸ்ரீமத் பாகவதம் தசமஸ்கந்தம் பூர்வ பாகம் ஐந்து அத்யாயங்களில். கிருஷ்ணபரமாத்மா நந்த கோகுலத்தில் வஸித்துக் கொண்டிருந்த கோபியர்களுடன் யமுனு நதிக்கரையில் உல்லாஸமாக நடித்த ராஸக்ரீடை எனப்படும் உத்ஸவம் வர்ணிக்கப்பட்டுள்ளது.

இந்த க்ரீடையைப் பிராகிருதமாக எடுத்துக் கொள்ளாமல், அதில் அந்தர் கதமாக இருக்கும் ஆழ்ந்த கருத்தை விசாரித்தால், ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் உள்ள தொடர்பு புலப்படும்.

உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருக்கும் ஜீவபிரம்ம ஐக்கியம், இந்த ஐந்து அத்தியாயங்களில் மறைமுகமாக, நாயக—நாயகி பாவனையில், போதிக்கப் பட்டிருப்பதால், ராஸ பஞ்சாத்யாயியை 'ராஸோபநிஷத்' என்றும், ஆகவே தினசரி பாராயணத்திற்கு உகந்தவை என்றும், சான்ருேர்கள் கருதுகிருர்கள்.

இராஸக் கிரீடையையும் அதற்குள் அடங்கியிருக்கும் தத்வத்தையும் எடுத்து உரைப்பதற்கு முன்பு, ஏற்கனவே நடந்த ஒரு நிகழ்ச்சியைச் சுருக்கமாகக் கூற வேண்டியது அவசியம்.

நந்த கோகுலத்தில் வஸித்து வந்த கன்னிகைகள், நந்தகோபருடைய குமாரனைப் பதியாக அடையவேணும் என்ற எண்ணத்துடன், மார்கழி மாதத்தில் அதி காலையில் எழுந்து, யமுனையில் நீராடி, காத்யாயனி தேவியை மணலினுல் பிடித்த உருவத்தில் ஷோடசோபசாரத்துடன் வழிபட்டு வந்தார்கள்.

பூஜையை தினமும் விதிவத்தாகச் செய்துமுடித்து, "ஹேதேவி, உமக்கு நமஸ்காரம்; நந்தகோபருடைய குமாரனை எனக்கு பர்த்தாவாக அளிக்க வேணும்" என்று ஒவ்வொருவரும் வேண்டுவார்கள்.

"காத்யாயனி மஹாமாயே
மஹாயோகின் யதீச்வரி!
நந்த கோபஸுதம் தேவம்
பதிம்மே குரு தே நம:!!"

இந்த ரீதியாக ஒரு மாதம் வழிபட்டு வந்தார்கள். உடுத்திருக்கும் உடைகளை மேட்டில் அவிழ்த்து வைத்துவிட்டு ஆடையின்றி நீராடி வந்தார்கள்.

அவர்கள் நிர்வாணமாக நீராடி வந்தது அசாஸ்திரீயம் என்பதைக் காட்டி, பிறகு அனுக்கிரஹம் செய்யவேணும் என்ற உத்தேசத்துடன், ஒருநாள் கிருஷ்ணன் தன் நண்பர்களுடன் அந்த இடத்திற்கு வந்து, அவர்கள் மேட்டில் அவிழ்த்து வைத்திருந்த வஸ்திரங்களை மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு, அருகில் இருந்த நீப விருக்ஷத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

நீராடி முடிந்தவுடன், தங்கள் சேலைகளை வைத்திருந்த இடத்தில் காணமல், மரத்தின் மேல் கிருஷ்ணன் மூட்டையாக வைத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தார்கள்.

"நீங்கள் மரத்தின் அடிக்குத் தனித்தனியாகவோ எல்லோரும் சேர்ந்தோ வந்து, அவரவர்களுடைய சேலைகளைப் பெற்றுக் கொள்ளலாம்" என்று புன்முறுவலுடன் சொன்னான்.

ஆனல் அவர்கள் எப்படி வருவார்கள்? கழுத்துவரை அதிசீதளமான ஜலத்தில் நின்று கொண்டு, தங்களுடைய வஸ்திரங்களைக் கொடுக்கவேணும் என்று பலவாருக வேண்டினர்கள். அப்படியும் கிருஷ்ணன் கொடுக்கவில்லை.

பிறகு ராஜாவிடத்தில் புகார் செய்வோம் என்று மிரட்டினர்கள். "எப்படி புகார் செய்கிறீர்கள் என்பதைப் பார்ப்போம்" என்று சொல்லி, சேலைகளைக் கொடுப்பதற்கு இசையவில்லை.

பிறகு வேறு வழியில்லாமல், உடம்பை இரு கரங்களாலும் மூடிக்கொண்டு கரை ஏறி, வஸ்திரங்களைக் கேட்டார்கள்.

அதுவும் போதாதென்று அவர்கள் தெய்வத்திற்குச் செய்த அபசாரத்திற்குப் பிராயஸ்சித்தமாக, இருகரங்களையும் தூக்கித் தலையின்மேல் கூப்பிக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேணும் என்று சொன்னர்.

தாங்கள் செய்த காரியம் பிசகு, அதனல் தங்கள் எண்ணம் பூர்த்தியடையாமல் போய்விடும் என்பதையறிந்து, கிருஷ்ணன் சொன்னபடி செய்தார்கள். பிறகு சேலைகளைப் பெற்றுக் கொண்டார்கள்.

இந்த நிகழ்ச்சிக்கு 'கோபி வஸ்த்ராபஹரணம்' என்று பெயர். இதைப் பிராகிருதமாக அர்த்தம் செய்யலாகாது. ஆழ்ந்த வேதாந்த தத்வம் இதில் அடங்கியிருக்கிறது.

ஜீவர்கள் தேஹாத்ம புத்தியையும் அஹங்காரத்தையும் மமகாரத்தையும் விட்டு ஒழித்தாலல்லாது, பகவானுடன் ஐக்கியமாக முடியாது என்பது இதன் உட்கருத்து.

இப்படி கிருஷ்ணன் தங்களைக் கடுமையான சோதனைக்கு ஆளாக்கின போதிலும், அவரிடம் சினங்கொள்ளாமல், அந்தரங்கப் பிரியத்துடன் அந்த இடத்தைவிட்டு நகராமல், கீழ்நோக்கினவர்க

ளாக அங்கேயே நின்று கொண் டிருந்தார்கள்.

அதைக் கண்டு, "உங்கள் உள் ளத்தில் உள்ள எண்ணத்தை நான் அறிவேன். அது அண்மை யில் நிறைவுபெறும். ஓர் இரவு நீங்கள் என்னுடன் உல்லாஸ மாகக் கிரீடை செய்வீர்கள்" என்று மனமுகந்து வாக்குத் தானம் செய்தார்.

கோபியர்களுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றவேணும் என்ற எண்ணத்துடன், சரத்ருது வில் ஒரு நாள் சாயங்காலத்தில் யமுனைக்கரையில் ஒரு பாறை யின்மேல் உட்கார்ந்து கொண்டு, பகவான் குழலை ஊதினர்.

அன்று பௌர்ணமி. நிர்மல மான ஆகாயத்தில் பூரண சந்தி ரன் பிரகாசித்துக் கொண்டிருந் தது. நதிக்கரையில் மலர்ந்திருந்த மலர்கள்மேல் பட்ட காற்று, மந்த மாகவும் ஸௌரப்யமாகவும் சீதளமாகவும் வீசிக் கொண்டிருந் தது; இயற்கையின் சோபை மனோக்ஞமாக இருந்தது. நடக்க விருக்கும் உத்ஸவத்திற்கு ஏற்ற சூழ்நிலை நிலவி யிருந்தது.

பகவானின் குழலோசையைக் கேட்ட கோபியர்களுக்கு வீட்டில் கால் தங்கவில்லை. செய்து கொண் டிருந்த காரியங்களை அப்படி அப் படியே போட்டுவிட்டு, "நான் முந்தி" "நீ முந்தி" என்று போட்டி . போட்டுக்கொண்டு, வஸ்திரங்களையும் அணிகலன்களை யும் சரியாக அணிந்து கொண்டு இருக்கிறோமா என்பதைக்கூடக் கவனிக்காமல், கிருஷ்ணன் வீற்றி ருக்கும் இடத்திற்கு விரைந்து ஓடி வந்தார்கள்.

வீட்டில் குழந்தைகளுக்குப் பால் கொடுக்க வேணுமே, கணவ னுக்கு உணவு அளிக்க வேணுமே என்ற எண்ணமோ, இரவு நேரம் ஸ்திரீகள் தனியாக வெளியே போகலாமா என்ற எண்ணமோ, அவர்களுடைய மனத்தில் தோன் றவே இல்லை. இது பக்தியின் உயர்ந்த நிலையை ஸூசிப்பதாக இருக்கிறது.

ஸாதாரணமாக, ஸ்திரீகளுக் குத் தங்கள் வீட்டின் பேரிலும் தங்கள் உற்றார் உறவினர்கள் பேரி லும் பற்றுதல் அதிகம். இரவில் வெளியே போகவும், தங்கவும், சங்கிப்பார்கள். அப்படியிருந்தும் கோபியர்கள் கிருஷ்ணனுடைய வேணு கானத்தில் மயங்கி, அவ ரைத் தேடிக்கொண்டு ஓடினர் கள். யார் தான் அந்த கானத் தைக் கேட்டு அவரிடம் போகா மல் இருப்பார்கள்?

அது ஸாதாரண கானமல்ல. பிரம்மம் ஜீவனைத் தன்னிடம் வா என்று சொல்லி அழைக்கும் கீதம் அது.

அவர்கள் வந்தவுடன் நல்வரவு கூறி, பகவான் சொன்னர்; "நீங் கள் இரவில் துஷ்ட விலங்குகள் நிறைந்த காட்டுக்கு என்னைத் தேடிக்கொண்டு வந்த காரணம் யாது? வீட்டில் உங்களைக் கணவர்

களும் குழந்தைகளும் தேடுவார்கள். அவர்களைக் கவலைக்குள்ளாக்குவது சரியல்ல. ஆகவே தாமதிக்காமல் வீட்டுக்குத் திரும்புங்கள்; வீட்டில் இருந்துகொண்டே மனத்தினால் என்னை தியானம் செய்தாலே போதுமானது'' என்று.

இந்தப் பிரியமற்ற வார்த்தைகளைக் கேட்ட கோபியர்கள்; "தாங்கள் இப்படிப் பேசுவது சரியல்ல; தங்களுடைய பாதாரவிந்தங்களே புகல் என்று எண்ணி, ஸர்வ ஸங்க பரித்யாகம் செய்து நாங்கள் வந்திருக்கிறோம். எங்கள் மனத்தைத் தாங்கள் அபஹரித்து விட்டீர்கள் எனவே வீட்டை நோக்கி எங்கள் பாதங்கள் நகர மாட்டா; ஆகவே நாங்கள் எப்படித் திரும்புவோம்?'' என்று கூறினார்கள்.

இவர்களுடைய அனன்ய பக்தியை மெச்சி, பகவான் இவர்களுடன் சிறிது நேரம் கூடிக் குலாவினார். தங்களிடம் பகவான் காட்டின சலுகையைக் கண்டு, நாம் மற்றவர்களைவிட உயர்ந்தவர்கள் என்று கர்வம் அடைந்தார்கள்.

அந்த கர்வத்தை அடக்கி அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்ய வேணும் என்ற உத்தேசத்துடன், அந்த க்ஷணமே அங்கிருந்து மறைந்தார்.

பகவான் மறைந்தவுடன், அந்தப் பிரிவைத்தாங்க முடியாமல் கோபியர்கள் அவரை யமுனையின் கரையிலிருக்கும் காடுகளில் தேட ஆரம்பித்தார்கள். நிலவு வீசிக்கொண்டிருந்ததால், காட்டுக்குள் வெகுதூரம் சென்றார்கள், மரங்களையும், செடிகளையும், கொடிகளையும் "நீங்கள் கிருஷ்ணனைக் கண்டீர்களா?'' என்று வினவினார்கள்.

கடைசியில் பாதச் சுவடுகள் காணப்பட்டன. அவைகளைத் தொடர்ந்து சென்று, அங்கு ஒரு ஸ்திரீ நின்றுகொண்டிருப்பதைக் கண்டார்கள். அவளுடைய பெயர் ஸ்ரீமத் பாகவத்தில் கொடுக்கப் படவில்லை. ஆனால் பிரம்மாண்ட புராணத்திலும் பிரம்ம வைவர்த்தபுராணத்திலும், அவள் விருஷபானு என்பவரின் பெண்; அவளுடைய பெயர் ராதை என்று காணப்பட்டுகிறது.

பிறகு எல்லாருமாக நதியின் கரைக்குத் திரும்பி வந்து, பிரிவாற்றுமையைத் தாங்கமுடியாமல் இஷ்டப்படி உயர்ந்த குரலில் பாடினார்கள். இதற்கு "கோபிகா கீதம்'' என்று பெயர். ஸ்ரீராம நவமி பஜனையிலும் மற்ற பஜனைகளிலும் பாகவதர்கள் இந்த கீதத்தைப் பாடுவதை இன்றும் காணலாம்.

அந்தக் கூட்டத்தில் பதினெட்டு கோபியர்கள் இருந்ததாகவும், ஒவ்வொருவரும் ஒரு சுலோகத்தைப் பாடினதாகவும், எல்லாரும் சேர்ந்து பத்தொன்பதாவது சுலோகத்தைக் கோஷ்டிகானமாகப் பாடினதாகவும், ஒரு ஐதி

ஹ்யம் இருந்து வருகிறது. ஸ்ரீதர ஸ்வாமிகளும் தாம் இயற்றியிருக்கும் உரையில் இதைக் கூறியிருக்கிறார்.

“தாங்கள் நந்தகோகுலத்தில் பிறந்ததன் காரணமாக, அது மிக்கசோபையுடன் விளங்குகிறது. லக்ஷ்மீதேவி அந்த இடத்தில் நித்யவாஸம் செய்கிறாள். அங்கு வஸிக்கும் குடி மக்களை, அனேக ஆபத்துக்களிலிருந்து தாங்கள் காப்பாற்றியிருக்கிறீர்கள். தங்களுடைய அமானுஷ்யமான செயல்களைப் பார்க்கும்போது, தாங்கள் கேவலம் யசோதையின் குழந்தை யல்ல, எல்லா ஜீவன்களுக்குள்ளும் அந்தர்யாமியாக இருக்கும் மஹா விஷ்ணுவே என்று தோன்றுகிறது. தங்களுடைய அதிசயச் செல்களையும் புண்ய சரித்திரத்தையும் ஸ்மரணம் செய்தாலே, தாபத்திரயத்தில் அடிபட்ட ஜீவன்களுக்கு மனதில் சாந்தி நிலவுகிறது. தாங்கள் மாடுகளை மேய்ப்பதற்காக ஓட்டிக்கொண்டு போகும்போது, காட்டு வழியில் கற்களும் முட்களும் மென்மையான தங்களுடைய பாதங்களைத் துளைக்குமே என்று எண்ணி, எங்கள் மனம் வாடுகின்றது. அப்படித் தாங்கள் வெளியே சென்றிருக்கும்போது, தங்களைக் காணாத ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகமாக நாங்கள் கழிக்கிறோம். தாங்கள் எங்கள் ஸமீபத்தில் இருக்கும்போது, தங்களையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு இருக்க வேணும் என்பது எங்களுடைய விருப்பம். ஆனால் கண்ணின்மேல் இமை வந்து மூடுகிறது. ஏன் பிரம்மா கண்களை இந்தமாதிரி அமைத்தார் என்று அவர்மேல் குற்றம் கூறும்படி தோன்றுகிறது. வீடு, வாசல், உற்றார், உறவினர் எல்லாரையும் பரித்தியாகம் செய்துவிட்டு வந்த எங்களை, நடுநிசியில் திக்குத் தெரியாத காட்டில் இப்படித் தவிக்கும்படி விட்டுத் தாங்கள் போகலாமா? எனவே தயை கூர்ந்து எங்களுடைய குற்றங்களை மன்னித்து, மறுபடியும் காட்சி தரவேணும்” என்று மனம் உருகிப் பாடினார்கள்.

உடனே பகவான் மன்மதனுக்கும் மேம்பட்ட மன்மத ரூபமாக அவர்கள் நடுவில் வந்து குதித்தார்.

அவரைக் கண்டவுடன் கோபியர்கள் அளவிலா மகிழ்ச்சியையடைந்தார்கள்.

“தங்களிடம் அனன்யமான பக்திகொண்ட எங்களை இப்படித் தவிக்கும்படி விடலாமா?” என்று கேட்டதற்கு, “உங்களுடைய பக்தியைச் சோதனை செய்வதற்காக அப்படி நான் செய்தேன். நான் மறைந்தவுடன் வீட்டுக்குப் போய்விடுகிறீர்களா? அன்றேல் வீட்டை மறந்து, இருந்த இடத்திலிருந்து நகராமல் என் ஞாபகமாகவே இருக்கிறீர்களா?—என்பதைப் பரீக்ஷை செய்து பார்ப்பதற்காகத்தான் அப்படிச் செய்தேன். அதுவும் உங்களுடைய நன்

மைக்காகவே" என்று பதில் சொன்னர்.

உண்மையில் கிருஷ்ணனைக் காணுதபோது அவர்களுடைய மனம் அவரிடத்திலேயே லயித்திருந்தது. அவர்கள் பேசின பேச்செல்லாம் கிருஷ்ணனைப் பற்றியதே. அவர்களுடைய உள் மனதில் கிருஷ்ணன் குடிகொண்டிருந்தான். அவருடைய உத்தம குணங்களையே பாடிக்கொண்டிருந்தார்கள்.

பிறகு ராஸோத்ஸவம் நடந்தது. கோபியர்கள் கிருஷ்ணனை நடுவில் நிறுத்தி, அவரைச் சுற்றி வட்டமாக நின்றுகொண்டார்கள். நடுவில் ஒரே கிருஷ்ணன் இருந்தபோதிலும், ஒவ்வொரு கோபியும் தன் வலது பக்கத்தில் ஒரு கிருஷ்ணனையும் இடது பக்கத்தில் மற்றொரு கிருஷ்ணனையும் பார்த்தாள்.

இந்தக் கிரீடை விடியற்காலை வரை நடந்தது. பிறகு எல்லாரும் தங்களுடைய வீட்டுக்குத் திரும்பினார்கள்.

இந்த வர்ணனையைக் கேட்டவுடன், பரீக்ஷித் மஹாராஜாவுக்குச் சில சந்தேஹங்கள் தோன்றின. அவை எல்லாருக்கும் ஏற்படக்கூடியவை தான். அவைகளைப் பயன்படுத்திக் கொண்டு, கிருஷ்ணுவதாரத்தையும் ஹிந்து மதத்தையும் நன்கு பழிப்பவர்களும் உண்டு.

ஸமீப காலம் வரை, கிருஸ்தவ பாதிரிமார்கள் ராஸக்கிரீடையைச் சுட்டிக்காட்டி, "ஹிந்து மதம் இழிவானது, ஆகவே அதை விட்டு எங்கள் மதத்துக்கு வந்து சேருங்கள்" என்று மக்களிடம் பிரசாரம் செய்வது வழக்கமாக இருந்தது. எனவே இந்த ஸந்தேஹங்களைத் தீர விசாரிக்கவேண்டியது அவசியம்.

முதன் முதலாக ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டியது, இந்தக் கிரீடை யதோக்தமாக நடந்ததல்ல என்பது.

கிருஷ்ண பரமாத்மாவுக்கு "யோகேசுவரன்" என்று ஒரு பெயர் உண்டு.

தன் வாயில் பதினுன்கு லோகங்களைக் காட்டினவுடன், யசோதை "இது என் குமாரனுக்கு உள்ள யோக மாயையினுலா?" என்று வினவுகிருள்.

அர்ஜுனனுக்குத் தன் விச்வரூபத்தைக் காட்டும்போது, அது தன் யோகமாயையினுல் காண்பிக்கப்பட்டது என்று கூறுகிருர்

தன்னைப் பல கிருஷ்ணன்களாக மாற்றிக்கொண்டு எத்தனை கோபியர்கள் இருந்தார்களோ அத்தனை கிருஷ்ணன்களாகத் தோன்றியதும், யோகமாயையினுல் தான்.

கோபியர்கள் யமுனு நதிக்கரையில் ராஸக் கிரீடையில் ஈடுபட்டிருந்தபோது, வீட்டிலும் இருந்தார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. இதுவும் அவருடைய

மாயையினுல்தான் என்பது சொல்லாமலவே விளங்குகிறது.

எல்லாவற்றையும் சேர்த்துப் பார்க்கும்போது, இந்த ஸம்பவம் முற்றிலும் மாயாகல்பிதம் என்று ஏற்படுகிறது.

தவிரவும் 'ஆத்மாராமன்' என்று பல இடங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. தன் ஆத்மாவே ஆனந்த ஸ்வரூபம், அதிலேயே லயித்து ஆனந்தத்தை இடைவிடாமல் அனுபவித்துக்கொண்டிருக்கும் அவருக்குக் கிராம்ய மான ஸுகம் எதுவும் அவசியமில்லை.

கிருஷ்ணன் கோகுலத்தில் தன் பதினோராவது வயதுவரை தான் தங்கினுர். ராஸக்ரீடை அவருடைய ஏழாவது வயதில் நடந்தது என்று கூறுவதற்குத் தக்க சான்றுகள் இருக்கின்றன.

ஆனுல் இந்தக் கிரீடையின் உள் தந்திரத்தை யறியாமல், ஸாதாரண மக்கள் இதைப் பின்பற்றிக் கெட்டுபோக மாட்டார்களா என்று ஆக்ஷேபம் செய்யலாம்.

"தேஜீயஸாம் நதோஷாய" என்ற நியாயத்தின்படி, ஜீவன் முக்தர்கள் எதையும் செய்யலாம். ஆனுல் ஸாதாரண மக்கள் அதைப் பின்பற்றக் கூடாது.

பெரும் நெருப்புக்கு ஈரம் இல்லை என்பதுபோல், ஜீவன் முக்தர்களையும் அவதார புருஷர்களையும் எதுவும் பாதிக்காது. அந்த நிலையை எட்டாதவர்கள் அந்தப்படி செய்தால் நாசத்தை யடைவார்கள்.

சிவன் ஆலஹால விஷத்தைச் சாப்பிட்டார் என்று ஸாதாரண மனிதன் சாப்பிட முடியுமா? அவதார புருஷர்களுடைய உபதேசத்தைப் பின்பற்றி நடப்பதே உசிதம்; அவர்கள் செய்த காரியங்களைச் செய்ய நமக்கு அதிகாரம் கிடையாது.

கடைசியாக, கோபியர்கள் இரவில் வெளியே சென்று பரபுருஷனுடன் கிரீடை செய்யலாமா என்ற கேள்வி எழலாம். இது மாயா கல்பிதம் (மாயையால் கற்பிக்கப்பட்டது) என்று ஏற்கனவே கூறப்பட்டுள்ளது.

தவிரவும், கிருஷ்ணனை அவர்கள் பரபுருஷனுக எண்ணவில்லை. எல்லாருடைய ஹ்ருதயத்திலும் அந்தர் யாமியாக உள்ள பரப்பிரம்மம் என்றுதான் எண்ணினுர்கள்.

அந்தப் பரம்பொருளிடத்தில் நிரதிசயமான பக்தி ஏற்பட்டு, அதன் வேகத்தினுல் ஸர்வஸங்க பரித்யாகம் செய்துவிட்டு, அத்துடன் ஐக்கியம் ஆகவேணும் என்று சென்றுர்கள்.

அவர்களுக்கு முதலில் கிருஷ்ணனிடம் காதல் ஏற்பட்டிருந்த போதிலும், அது விரைவில் உத்கிருஷ்டமான பக்தியாக மாறி விட்டது. ஆகவே இது நிரவத்யம், யாதொரு தோஷத்திற்கும் உட்பட்டதல்ல.

✻

# உமாபதி சிவனர்

ஸ்ரீ ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை

இவர் தில்லை தீக்ஷிதர்களில் ஒருவர். இருமொழியிலும்எல்லாக் கலைகளையும் ஓதியுணர்ந்தவர்.

இவர் ஒரு நாள் சிவிகையில் ஊர்ந்து செல்லும்போது, மறை ஞானசம்பந்த சுவாமிகள் திருக் கடைக்கண்சாத்தி, பகற்குருடன் போகின்ருன் எனப் பகர்ந்தனர்.

இதைக் கேட்டவுடன் பல்லக்கை விட்டிறங்கி அவர் அடியில் விழுந்து தண்டனிடவும், அவரால் தீக்ஷிக்கப்பட்டு உபதேசம் பெற்றனர். அவருடனிருந்து அவர் உண்டபின் அவர் எச்சிலைப் புசித்துவந்தாரானதால், தில்லை மூவாயிரவர் சாதியினின்றும் தள்ளி வைத்தனர். அது முதல் தில்லைக்குக் கிழக்கிலுள்ள கொற்றவன்குடி என்னு மூரிலே வசித்து வந்தார்.

ஒருகால், உற்சவ ஆரம்பத்தில் கொடியேற்றம் செய்யும்போது, அது ஏறமாட்டாமையால், அசரீரி வாக்கின்படி உமாபதி சிவத்தைத் தீக்ஷிதர்கள் எல்லா மரியாதைகளுடன் அழைத்துப் போய் வேண்டவும், அவர் கொடிக்கவி என்னும் நூலையருளிச் செய்து, அக்கொடியினை ஏறச் செய்தனர். இவர் இன்னும் செய்த அற்புதம்: பெற்ருன் சாம்பான் என்னும் ஒரு புலையனுக்கும், முள்ளிச்செடிக்கும் முத்திகொடுத்தருளியது.

இவர் சித்தாந்த சாத்திரங்கள் 14-இல், சிவப்பிரகாசம், திருவருட்பயன், விணுவெண்பா, கொடிக்கவி, உண்மைநெறி விளக்கம், போற்றிப்பஃருெடை, நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம் ஆகியஎட்டு நூல்களையும் செய்ததுமல்லாமல், வடமொழியில் பௌஷ்கர ஆகமத்துக்கு விருத்தியொன்றும், தமிழில் கோயிற் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறை கண்ட புராணம், சேக்கிழார் நாயனுர் புராணம், திருப்பதிகக் கோவை, சிவக்ஷேத்திர சிவநாமக்

கலிவெண்பா முதலியவற்றையும் செய்தருளினர்.

இவர்களுடைய காலம் இன்றைக்கு 660 வருஷங்களுக்கு முற்பட்டதாகத் தெரியவருகிறது. அன்றுமுதல் இன்றுவரை எழுதப்பட்ட எல்லாச் சைவ நூல்களும், இவர்கள் நூல்களின் சொல்லையும் பொருளையும் ஒட்டி எழுந்தனவானல் இவர்கள் பெருமை இன்னதென நாம் சொல்ல எளிதாகுமோ?

இவர் காலத்துக்குப்பின் ஏற்பட்டவைதான் திருவாவடுதுறை முதலிய சைவமடங்கள். திருக்கைலாய பரம்பரையினையும், மெய் கண்ட சந்ததியையும் பற்றி வந்த மகான்கள் அநேகர். ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் இப்பரம்பரையிற் சேர்ந்தவராவர்.

[நன்றி : தில்லைச் சிற்றம்பலவன் கோயில்]

★

# ஓர் இனிய கடிதம்

தருநன் :

கு. அருணகிரிநாதன்,
உதவி மானேஜர்,
"ஞானசம்பந்தம்" திங்களிதழ்
தருமை ஆதினம், மாயூரம்.

பெறுநர் :

உயர்திரு. ஆசிரியர் அவர்கள்,
"அருள்" திங்கள் இதழ்,
231, ஆழ்வார் திருநகர்,
விருகம்பாக்கம், சென்னை.

பேரன்புடையீர்! அன்பு வணக்கங்கள்!!

தாங்கள் பல்லாண்டுகளாக வெளியிட்டு வருகின்ற "அருள்" திங்களிதழ் எங்கள் ஞானசம்பந்தம் அலுவலகத்திற்குத் தொடர்ந்து வந்து கொண்டிருப்பது கண்டு மிக்க மகிழ்ச்சி!

சமயத்தை வளர்க்கும் பணியில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவர்களில் தாங்களும் ஒருவராக இருந்து தொண்டாற்றி வருவது கண்டு அக மகிழ்ச்சி மிக அடைகின்றோம்.

சமுதாயம் சமயத் தத்துவங்களை அறிந்தும், சமயப் பண்பாடுடன் நடந்தும்வர, தாங்கள் சிறந்த கட்டுரைகள் வெளியிட்டு வருவதுடன், சிந்தனை, பண்பாடு, மனிதத்தன்மை, பிறரை மதித்து நடத்தல், பேரறிஞர்கள் மெய்ஞ்ஞானிகள், பண்பாளர்கள், முதலான பெருமக்களை அறிந்து, அவர்களுடன் ஆழ்ந்த பற்றுடன் பழகி, அறிவாற்றலையும், பண்பாட்டையும் பெற்று, இச் சமுதாயம் வளமோடு வாழ்வதற்குரிய முறையில் தங்களின் எழுத்துப் பணி அமைந்திடல் வேண்டும் என்பது நமது விருப்பம்.

தங்களுடைய உயர்ந்த பணி மேலும் செழித்தோங்கி வளர, நம் தருமை ஆதீனத்தின் தாபகர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தப் பெருமானின் திருவருளை வழுத்தி, இப்பொழுது சைவ ஞானபீடத்தில் எழுந்தருளி அருளாட்சி புரிந்து வரும் 26 வது குருமகா சந்நிதானம் திருப்பெருந்திரு. சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் அருளாசியையும் வேண்டி அமைகின்றேன். வணக்கம்.

இங்ஙனம்,
கு. அருணகிரிநாதன்,
உதவி மானேஜர்
28-2-72
"ஞானசம்பந்தம்" திங்களிதழ்
தருமையாதீனம்
மாயூரம்.

# பாவியும் பரகதி அடையலாம்!

ஹ்ருஷீகேசம்
ஸ்வாமி ஸ்ரீ சிவானந்தா

ஒரு காலத்தில், நாரத மகா முனிவர் ஒரு காட்டின் வழியே போய்க் கொண்டிருந்தபோது, ஒரு மான் மரண வஸ்தையில் துடித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். அதன் கால்களில் ஒன்று அம்பு பாய்ந்து முறிந்து போயிருந்தது.

கொஞ்ச தூரம் சென்றதும், அதே நிலையில் ஒரு ஆண் பன்றியும் ஒரு முயலும் தவித்துக் கொண்டிருந்ததைக் கண்டார்.

அவருக்கு மிக்க பரிதாபமாயிருந்தது.

மரத்தின் பின்னலிருந்த புதரில் வேடன் ஒருவன் ஒளிந்து கொண்டு, ஓர் மானைக் கொல்ல வில்லை வளைத்து, நாண் ஏற்றி அம்பு எய்யத் தயாராயிருந்தான்.

அவனிடம் நேராக நாரதர் செல்லவே, மான் தப்பித்துக் கொண்டது.

தனது கவனத்தை மாற்றிய முனிவர் மீது வேடன் கோபங் கொண்டு அவரைத் தூற்றினன்.

வேடன், "முனிவரே! ஏன் என்னிடம் வந்தீர்? குறி வைத்த மான் நீர் குறுக்கே வந்தபடியால், ஓடியே போயிற்று" என்று குறை கூறவே;

நாரதர், "நான் வழி தவறி விட்டேன், வேடா! உன்னை ஒன்று கேட்கிறேன். மிருகங்களை வேட்டையாடினல், அவைகளை ஏன் குற்றுயிராய்க் கிடத்துகிருய்? அவைகளைப் பூராவும் ஏன் கொல்லக்கூடாது? குற்றுயிராய்க் கிடக்கும் மிருகங்கள் மிகவும் துன்புறுகின்றன" என்று கூறினர்.

வேடன், "முனிவரே! குற்றுயிராயுள்ள மிருகங்கள் படும் அவஸ்தைகள் எனக்குப் பரமானந்தத்தைத் தருகின்றன" என்று பதிலுரைத்தான்.

மேலும், அவ்வேடன், "முனிவரே! என்னுடைய குடிசைக்கு வாருங்கள். மான் தோலோ, புலித்தோலோ தங்களுக்குத் தருகிறேன்" என்று அழைத்தான்.

நாரதர் அதற்கு, "வேடா! எவ்விதத்தோலும் எனக்கு வேண்டாம். எனக்கு உறுதியான ஓர் வாக்குத்தத்தம் கொடு. அது மாத்திரம் போதும். நாளை முதல் நீ எந்த மிருகத்தைக் கொல்வதானலும், அதைக் குற்றுயிராய்க் கொல்லாமல், முற்றிலும் கொன்று விடு" என்ருர்.

வேடன், "முனிவரே! என்ன வேடிக்கையான வரத்தைக் கேட்கிறீர்கள்? ஒரு மிருகத்தைக் குற்றுயிராய்க் கிடத்தி விடுவதால் என்ன தீங்கு உண்டாகும் என்பதைத் தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டான்.

அதற்கு நாரதர், "காய மடைந்த பிராணிகள் சகிக்க வொண்ணுத வலியால் தவிக்கும். அதனுல் நீ பெரிய பாவத்தைச் செய்தவனுகிருய். சித்திரவதை செய்யப்பட்டு, மரணத்துக்கு உள்ளான இம்மிருகங்களெல்லாம், அடுத்த ஜன்மங்களிலே இதே மாதிரியாக உன்னைக் குற்றுயிராய்க் கிடத்திக் கொன்று பழிக்குப் பழி வாங்கும். தாக்குதல் கட்டாயமாக எதிர்த் தாக்குதலைச் செய்யும். கர்மா எனும் சட்டமானது இரக்கமும் தயை தாக்ஷண்யமும் இல்லாதது" என்ருர்.

நாரத முனிவரது திருவாயிலிருந்து வெளிப்பட்ட ஞான மயமான திருவாசகங்களைக் கேட்டதும், வேடன் பெரும் உணர்ச்சி வசப்பட்டான். பயமும் பச்சாதாபமும் அவனைப் பீடித்துக் கொண்டன. தான் செய்த தீய செய்கைகளுக்காகப் பச்சாதாபப் பட்டான். அவன் கண்களிலிருந்து அருவி போலக் கண்ணீர் பெருகியது. நாரத முனிவரின் திருப்பாதங்களிலே அடியற்ற மரம் போல விழுந்தான்.

"மஹரிஷியே! இழிவான பாபி நான்! பிள்ளைப் பிராயந்தொட்டு இதுகாறும் என் தொழில் இதுவே. என்னை ஈடேற்றுங்கள், தேவரே! என்னைக் காப்பாற்றுங்கள். தங்களையே பூரணமாகச் சரண் புகுகின்றேன்" என்ருன்.

நாரதர், "மறு பேச்சில்லாமல் என் புத்திமதியைப் பின் பற்றுவாயானல், உன்னை நான் ரக்ஷிக்கிறேன்" என்ருர்.

அதற்கு வேடன், "மதிப்பிற்குரிய மஹரிஷியே! எழுத்துக்கெழுத்து மாருமல் தங்கள் கட்டளையைச் சிரசின்மேல் வகித்து நிறைவேற்றுகிறேன். தங்கள் சித்தம் போல நடக்கிறேன்" என்று பணிந்தான்.

நாரதர், "ஓ, வேடா! வில்லை முறி உடனே" என்ருர்.

வேடன், "பிறகு எப்படி ஜீவிப்பது, ஸ்வாமி?" எனவும், நாரதர், "தினந்தோறும் ஆகாரம் படைக்கிறேன். அதற்காகக் கவலைப் படாதே, குழந்தாய்!" என்று தேற்றினுர்.

வேடன் தக்ஷணமே முறித்தான் வில்லை. அவனைப் பார்த்து, "நேராக வீடு திரும்பி, உன் சொத்துக்களை ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடு. கங்காதீரத்திலே ஒரு குக்கிராமத்தில் ஒரு சிறு குடிசை கட்டிக் கொள். ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய நாமத்தையே இடை விடாமல் பாடு. 'ஓம் ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே, ஹே நாதா நாராயண வாஸுதேவா' என்று எப்போதும் பஜிப்பாய். தினந்தோறும் போதுமான உணவை அனுப்பி வைக்கிறேன். உன் பெயர் இனி கிருஷ்ணதாஸ்" என்று உபதேசித்தார்.

வேடனுகிய கிருஷ்ணதாஸ் உபதேசத்தைப் பிறழாமல் பின் பற்றினுர்.

கங்காதீரத்திலே ஒரு பெரிய மஹரிஷி வந்துள்ளார் என்பதை கிராமவாசிகள் அறிந்தார்கள்.

புது மஹானுக்காகப் பத்துப் பதினைந்து பேர் தினந்தினம் போஜனம் தயாரித்துக் கொடுத்தார்கள்.

வேடுவ முனிவர் தமக்குப் போதுமான போஜனத்தை ஏற்றுக் கொண்டார். மனப்பூர்வமான நம்பிக்கையோடும் பக்தியோடும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா

வினுடைய நாமத்தைப் பாடி வந்தார். இங்ஙனம் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. அவர் ஒரு உண்மையான பக்தர் ஆகி விட்டார்.

"எனது சிஷ்யனைப் போய்க் பார்க்கலாம், வாருங்கள்" என்று ஒரு நாள் நாரதர் பர்வத ரிஷியை அழைத்தார். கிருஷ்ணதாஸின் குடிசைக்கு இரு மஹரிஷிகளும் எழுந்தருளினார்கள்.

கிருஷ்ணதாஸ் தமது ஆடையின் நுனியாலே பூமியில் செல்லும் எறும்புகளை மெதுவாக ஒதுக்கி வழி செய்து கொண்டு, அவ்விரு முனிவர்கள் முன்பாக சாஷ்டாங்க தண்டஞ் சமர்ப்பித்தார். குசப்புல்லினால் ஆக்கப் பெற்ற பாய்களின் மீது அமருமாறு பிரார்த்தித்தார். அவர்களது திருவடிகளை நன்னீரால் கழுவித் தூய்மைப்படுத்தி, சரணாமிர்தத்தை (பாதங்களைக் கழுவிய நீரை) அருந்தினார்; அதில் கொஞ்சம் எடுத்துச் சிரசிலே தெளித்துக் கொண்டார்.

பின், அவர் ஸ்ரீ கிருஷ்ண நாமத்தை உச்சரித்து சங்கீர்த்தனம் பாடலானார். மேலே உயர்த்திய கரங்களுடன் அவர் பரவசமாக நடனம் புரிந்து, ஆனந்தக் கண்ணீரை அருவி போலச் சொரிந்தார். தேஹ உணர்ச்சியே அற்றுப் போய், பாவ ஸமாதியாக ஆறுமணி நேரம் பஜித்தார். பின்பு தான் ஸ்தூல சரீர உணர்ச்சி திரும்பியது.

கிருஷ்ணதாஸின் மஹத்தான ஆத்மீயப் போக்கு கண்டு, முனிவர்கள் மிக்க ஆனந்தமுற்றனர். "உமக்கு ஆகாரம் கிடைக்கிறதா?" என்று நாரதர் கேட்க,' கிருஷ்ணதாஸ் "தாங்கள் அனுப்பும் ஒவ்வொருவரும் உணவைக் கொண்டு வருகிறார்கள்" என்று பதிலளித்தார். மஹரிஷிகள் அவரை ஆசிர்வதித்துச் சென்றார்கள்.

நாரத முனிவரின் கருணையால் கொடிய வேடன் கிருபாநிதியாகிய முனிவராக மாறிவிட்டான்.

பரிசமணி (Philosopher's Stone) இரும்பைப் பொன்னாக்கும்; ஆனால் இரும்பைப் பரிசமணியாகச் செய்து விடாது. ஒரு முனிவர் கேடுற்ற பாவியைப் பீடுற்ற முனிவராகச் செய்து விடுவார்.

ஸத்ஸங்கத்தின் மஹிமையைப் புகலத்தரமன்று. ஒரு கணப் பொழுதேனும் முனிவர்களோடு வைத்துக் கொள்ளும் இணக்கம், கணக்கிட முடியாத நன்மைகளைத் தரும். துராசார சம்ஸ்காரங்களையும் இலௌகிகத் தன்மையையும் பழுது பார்த்துத் தூய்மைப் படுத்தும்.

ஸம்ஸார ஸாகரத்தைக்கடக்க, ஸத் ஸங்கத்தைத் தவிர வேறு பத்திரமான கப்பலே கிடையாது. புதுச் சிடர்கள் குருவின் ஆதீனத்தில் இருக்க வேண்டும், பூரணமாகப் பயிற்சி பெற்று, ஆழ்ந்த தியானத்தில் நிலைத்திருக்கும்வரை.



# இன்பமே! எந்நாளும் துன்பம் இல்லை!



ஸ்ரீ வி. ஜி.
பன்னீர்தாஸ்

"இன்பமே! எந்நாளும் துன்பம் இல்லை!" என்பது அப்பரடிகள் திருவாக்கு.

இன்பமும் துன்பமும் கலந்ததே உலகியல் வாழ்க்கை என்பதாக, நாமெல்லாம் எண்ணிக்கொண்டிருக்கிறோம். நம்முடைய அனுபவமும் அப்படித்தான் இருக்கிறது.

ஆனால், உலகில் இன்பம்மட்டும்தான் இருக்கிறது, துன்பம் என்பதே கிடையாது என்று ஆணித்தரமாகக் கூறுகிறார் அப்பர் பெருமானார். அவரால் அவ்வாறு எப்படிக் கூற முடிகிறது?

உண்மையில், உலகம் இன்பமானதும் அல்ல, துன்பமானதும் அல்ல. அதை இன்பமாக்கிக் கொள்வதும் துன்பமாக்கிக்கொள்வதும் நம் கையில்தான் இருக்கிறது. அப்பர் ஸ்வாமிகளும் அவரைப் போன்ற மகான்களும், உலகத்தை இன்பமாக்கிக்கொள்ளும் இரகசியத்தை அறிந்து வைத்திருந்தார்கள். அதனால்தான் அவர்களால் "இன்பமே! எந்நாளும் துன்பம் இல்லை!" என்று அனுபவபூர்வமாகப் பேச முடிந்தது.

அந்த இரகசியம் யாது?

இந்த உலகம் ஒரு கண்ணாடி போன்றது.

நாம் கடையில் வாங்கும் கண்ணாடியில் நம்முடைய முகத்தைப் பார்த்துக் கொள்வது போல, உலகம் என்ற கண்ணாடியில் நம்முடைய மனத்தைப் பார்த்துக்கொள்ளலாம்.

அதாவது, உலகியலில் நாம் காணுகின்ற, நம்மைப் பாதிக்

கின்ற, இன்ப துன்ப நிகழ்ச்சிகள் அனைத்தும், நம்முடைய் உள்ளத்தில் படிந்திருக்கும் குணங்கள் அல்லது குற்றங்களின் நிழல்களே தவிர வேறல்ல.

"நாம் எங்கு சென்றாலும், நம்முடைய நிழல் நம்மைத் தொடராமல் விடாது!" என்னும் பழமொழியைக் கேட்டிருக்கிறோம் அல்லவா?

கண்ணாடியில் பிரதிபலிக்கும் சாயையை நிழல் என்று கூறுவது, பழங்காலத் தமிழ் மரபு.

உலகம் என்ற கண்ணாடியில், நம் உள்ளத்தின் நிழல்கள் தாம் காணப்படுகின்றன.

உள்ளத்தில் அன்பு, கருணை ஈகை, பக்தி, சாந்தி போன்ற நற்பண்புகள் நிரம்பியிருந்தால், உலகியலில் நமக்கு நேருகிற அனுபவங்களும் இன்பகரமாகவே அமைகின்றன.

உள்ளத்தில் பகைமை, கோபம் பொறாமை, உலோபம், கொடுமை வஞ்சனை போன்ற தீப்பண்புகள் நிரம்பியிருந்தால், உலகியலில் நமக்கு நேருகிற அனுபவங்களும் துன்பகரமாகவே அமைகின்றன.

ஆகவே, வாழ்வில் நமக்கு ஏதேனும் ஒரு துன்பம் நேருமானால், அது நம் உள்ளத்தின் உள்ளே ஒளிந்து கொண்டிருக்கிற ஏதோ ஒரு தீய பண்பின் எதிரொலியே என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

தெரிந்து கொண்டு, அத்தீய பண்பை நம் உள்ளத்தினின்றும் அறவே களைந்தெறிவதற்கு நாம் முயலவேண்டும். அவ்வாறு களைந்தெறிந்துவிட்டால், அந்தக் குறிப்பிட்ட துன்பமும் நம்மைப் பாதிக்காமல் மறைந்து ஒழிந்துவிடும்.

இவ்வாறு, நம்மிடத்திலுள்ள ஒவ்வொரு குற்றத்தையும் நாம் கண்டறிந்து களைந்தெறியவேண்டும் என்பதற்காகவே, இறைவன் நம் கண்ணெதிரே உலகம் என்ற கண்ணாடியைப் பிடித்துகொண்டு நிற்கிறார். அந்தக் கண்ணாடியில் நம்முடைய குணங்களும் குற்றங்களும் முறையே இன்பங்களாகவும் துன்பங்களாகவும் இடையறாது பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றன.

எனவே, நம்முடைய இன்ப துன்பங்களுக்குக் காரணம் அந்த இறைவனோ வேறு யாருமோ அல்லர். நம்மிடத்திலுள்ள குணங்களும் குற்றங்களுமே அவற்றிற்கு மூல காரணம் ஆகும்.

அப்பரடிகள் போன்ற பெரியோர்கள், தம் குற்றங்கள் அனைத்தையும் அறவே களைந்து, குணங்களை வளர்த்துக்கொண்டவர்கள். நாமும் அவ்வாறு வளர்த்துக்கொண்டால், "இன்பமே! எந்நாளும் துன்பம் இல்லை!" என்ற அவர்களுடைய உயரிய அனுபவத்தை, நாமும் அடைந்துவிடலாம் என்பது உறுதி!



ஆசிரியரும் வெளியிடுபவரும்: T. ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை. அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17